## ஆசிரியர் குழு



## உள்ளுறை

உ

சிவமயம்

திருச்செந்திலாண்டவன் துணை







மலர் 19 || கீலக ஸு ஆடித் திங்கள் 1-ம் உ [16-7-68] || இதழ்-7

# தீயன தவிர்க

வித்துவான் திரு. கோ. கோவிந்தசாமி அவர்கள்,
தமிழாசிரியர்,
இந்து தியலாஜிகல் உயர்நிலைப்பள்ளி,
சென்னை - 1.

---

**சா**ன்றுண்மை மிக்க பெருந்தகையார் ஒருவர் தம்மிடம் மூன்று கடுவன் பொம்மைகளை வைத்திருந்தார். அவற்றுள் ஒன்று தம் கைகளால் கண்களை மூடியவாறும், மற்றொன்று செவிகளைப்பொத்தியவாறும், வேறொன்று வாயைப்பொத்திய வண்ணமும் இருந்தது. அவற்றைப்பற்றி அவர் கூறும் விளக்கம் நமக்குச் சிறந்த அறிவுரையாகும்.

தீய இயல்புடையோரைக் காண்பது தீது எனும் கருத்தைக் கண்களை மூடியுள்ள முதல் கடுவன் அறிவுறுத்துகிறது.

தம் செவிகளைப் பொத்தியவண்ணமுள்ள மற்றொன்று தீயோரைக் காண்பது மட்டுமல்ல, தீயோர் சொற்களைக்

கேட்பதும் தீதாகும். தீய பண்புடையோர் அறிவுரை கேட்பின் நாம் துன்புற நேரிடும். தீயோர் அறிவுரைக் கேட்டலைத் தவிர்த்தல் வேண்டும் என வலியுறுத்திக் கூறுகிறது.

தீய சொற்களைப் பேசுவோர் நற்பண்புடையவராகார். தீய பண்புடையவரே யாவர். பாலுடன் ஒரு துளி நஞ்சு கலந்துவிடின் அப்பால் முழுதும் கெடுவது போன்றே தீயவருடன் சேர்ந்த நல்லோரும் விரைவில் தீயவராக ஆகி விடுவர். உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசு மியல்பினர் எனப் பிறர் தூற்றும் நிலைக்கு அன்னார் ஆளாக நேரிடும். ஆதலால் தவறியும் இழிசொற்களைப் பேசுவதோ அன்றி தீயோரைப் பற்றிப் பேசுவதோ கூடாது எனும் கருத்தை வாய் பொத்தியுள்ள மூன்றாவது கடுவன் எடுத்தியம்புகிறது.

கடுவன் பொம்மைகள் மூலம் அச்சான்றோர் நமக்குத் தரும் அறிவுரையினைத் தமது பாடல் மூலம் படம் பிடித்துக் காட்டுகிறார் ஔவைப் பெருமாட்டி.

''தீயாரைக் காண்பதுவுந் தீதே திருவற்ற
தீயார் சொற்கேட்பதுவுந் தீதே—தீயார்
குணங்க ளுரைப்பதுவுந் தீதே அவரோடு
இணங்கி இருப்பதுவுந் தீது''

தீயசெயல்கள் தீமையினை விளைவிக்கும். ஆதலின் தீயை விட அதற்கு அதிகமாக அஞ்சவேண்டியுள்ளது. தீயிடம் எச்சரிக்கையின்றி இருப்பின் எவ்விதம் ஓர் ஊரையே அழிக்க முயலுமோ அவ்விதமே தீயோர் சேர்க்கையால் ஒருவர் பல இன்னல்களை அடையநேரிடும். சான்றோன் என்ற சொல்லைக் கேட்பின் தன் மகனை ஈன்ற ஞான்றினும் பெரிதாக மகிழும் தாய் தீயோன் என்ற சொல்லைக் கேட்பின் அத்தகைய மகன் தனக்குத் தோன்றாமலிருக்கக் கூடாதா என்றே கருதுவாள். சான்றோன் என்ற பெயரைப் பெற ஆண்டுகள் பல ஆகும். தீயோன் என்ற பெயரை ஒரு நாளல்ல ... .... ஒரு ... மணித் துளியில் பெற்று விடலாம்.

தீயவை தீய பயத்தலான் தீயவை
தீயினும் அஞ்சப்படும்

என்பது தெய்வப்புலவர் திருவள்ளுவரின் பொய்யாமொழி யாகும்.

நெய் போன்ற ஒரு பொருளும் எரியும் நெருப்பினைச் சேர்ந்த காலத்து உடலை எரிக்கும் படியாகக் காய்ந்து கொடிய நோயினை உண்டாக்கும். நல்லோர் தீயவருடன் சேரின் கொடிய துன்பத்தினை அடைவர். ஆதலின் நற்பண்புடையோர் தீவினைக்கு அஞ்சுவதோடு அத்தீவினையாளரோடு நட்புக் கொள்தலையும் தவிர்த்தல் நன்றாகும்.

''நெருப்பழற் சேர்ந்தக்கால் நெய்போலாவதூஉம்
ஏரிப்பச்சுட்டு எவ்வநோய் ஆக்கும்
கொடுவினையர் ஆகுவர் கோடாரும் கோடிக்
கடுவினையர் ஆகுவர் சார்ந்து''

என்ற நாலடியார் இவ்வுண்மையை விளக்குகிறது.

நக்கப்படுவார்க்கு இன்பமுண்டாகும்படி நக்கிப் பின் கொல்லும் காட்டுப் பசுவைப் போன்று, தீயோர்க்குத் தம் தீய செயல்களால் ஆக்கமுண்டாயினும் அவை நல்லன வாகா என்பதை,

''தீய செயற் செய்வாராக்கம் பெருகினும்
தீயன தீயனவே வேறல்ல — தீயன
நல்லன வாகாவா நாவின் புறநக்கிக்
கொல்லும் கயவமாப் போல்''

என்று அறிவுறுத்துகிறது நீதிநெறி விளக்கம்.

நல்லபாம்பு எனும் நாகப்பாம்பு நஞ்சைத் தன்னகத்தே கொண்டது. அத்தகைய பாம்பையும் தீயோரையும் ஒப்பிட்டுப் பார்க்கும்போது பாம்பு தீயோருக்கு ஒப்பாகாது. ஏனெனில் பாம்பு மணிமந்திரங்களால் அடங்கிநிற்கும். தீயோர் எவ்விதம் முயலினும் திருந்தார். அவர்களை நல்லோராக்குதல் இயலாத செயலாகும்.

கொம்பையுடைய ஆடு மாடு போன்றவைகளிடம் ஐந்து முழத்தொலைவும், குதிரைக்குப் பத்து முழத்தொலைவும், யானைக்கு ஆயிர முழத்தொலைவும் விலகி இருத்தல் வேண்டும். ஆனால் தீமைகள் மிகுந்த தீயோர் கண்களுக்குத் தோன்றக் கூடாத அளவிற்கு அவர்களை விட்டு அகலுவதே நன்னெறியாகும்,

சூதாடும் தொழில் தீமை பயப்பது. முதலில் ஒன்றைப் பெற்று நூறு இழக்கும் தன்மையுடையது. இதனை நன்கறிந்திருந்தும் விடஇயலாது தவிக்கின்றனர் சிலர். தீயோர் சேர்க்கையினுல் அப்பழக்கத்தை மேற்கொண்டவர்கள் இறுதியில் எல்லையிலாத்துன்பத்தில் உழன்று வருந்துகின்றனர். அவர்கள் நிலை, பரிதாபத்திற்குரியதாக இருக்கிறது. ஆதலின் பொருள் இல்லையே என்பதற்காகத் தீயசெயல்களைச் செய்தல் கூடாது. அவ்விதம் செய்யின் அவன் பிறவிதோறும் வறியவனுக ஆகி விடுவான். எத்தகைய பெரிய பகைக்கும் தப்பஇயலும். ஆனுல் தீயவற்றைச் செய்து அதிலிருந்து தப்பஇயலாது. அது அவனை நிழல்போலத் தொடர்ந்து வரும்.

'தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை
வீயாது அடி உறைந்தற்று''

எனக்கூறுகிறது தமிழ்மறை.

தீயோர் என்பவர் பிறக்கும் போதே அவ்விதம் ஆகிவிடுவதில்லை. மாந்தர் நல்லினத்தவரோடு சேரின் நல்லவராகவும், தீயினத்தவரோடு சேரின் தீயவராகவும் ஆகிவிடுகின்றனர். தீய பழக்கத்தை மேற்கொண்டவர்கள் அப்பழக்கத்தை விட இயலாது துன்புறுகின்றனர். அது அவர்களை மேன்மேலும் வருத்தி பிறரின் இகழ்ச்சிக்கு உரியவராக ஆக்கி விடுகின்றது. ஆதலின் மாந்தர் தீய செயல்களைச் செய்வதைத் தவிர்க்க வேண்டும். தீயோருடன் நட்புக்கொள்வதையும், அவர்தம் சொற்களைக் கேட்பதையும் முற்றிலும் விலக்குதல் வேண்டும். சான்றோர் கேண்மையைப் பெறின் மலரோடு சேர்ந்த நாறும் மணம் பெறுதல் போன்று புகழ்பெறுவர்.

''நல்லாரைக் காண்பதுவும் நன்றே நலமிக்க
நல்லார் சொற்கேட்பதுவும் நன்றே-நல்லார்
குணங்க ளுரைப்பதுவும் நன்றே அவரோ
டிணங்கி யிருப்பதுவும் நன்று''

என்ற பாடலின்படி நல்லோர் இணக்கத்தைப் பெற்று நன்னெறியில் செல்லின் தீயோர் என்ற பெயரெடுக்காது துன்பச் சுழலில் சிக்காது இன்புற இயலும்.

---

# திருமந்திரம் TIRUMANTIRAM

## ஆறுந்தந்திரம் Tantra the Sixth

டாக்டர், திரு. பா. நடராசன் அவர்கள் M. A., D. Litt.,

---

( மலர் 19. இதழ் 6-ன் தொடர்ச்சி )

### துறவால் காணப்பட்டவன் இறைவன்
### God is reached by renunciation

42. இறப்பும் பிறப்பு மிருமையு நீங்கித்
துறக்குந் தவங்கண்ட சோதிப் பிரானை
மறப்பில ராய்நித்தம் வாய்மொழி வார்கட்
கறப்பதி காட்டு மமரர் பிரானே.

Beyond birth and death,
Reached by renunciate tapas
Is He, my Lord of resplendent glory!
Sing ye His praise! Incessant pray!
The Heaven's Lord shall show thee the Dharma's Land.

பிறப்பிறப் பில்லாத பெம்மான்; சோதியாம் தலைவன்; துறந்து செய்த தவத்தால் அடையப்பட்டவன்; மறவாது நாள்தோறும் வாழ்த்து வார்க்கு, தேவர் தலைவன் அற வுலகைக் காட்டுகிறான்.

### துறவு சுடரொளி யாக்கும்
### Renunciation leads to Light

43. பிறந்தும் இறந்தும்பல் பேதைமை யாலே
மறந்து மலஇருள் நீங்க மறைந்து
சிறந்த சிவனருள் சேர்பரு வத்துத்
துறந்த வுயிர்க்குச் சுடரொளி யாமே.

A myriad time are they born and dead,
In a million folly they forget this:
And in the darkness of mala art they fast enveloped;
When at last the hidden Grace of Siva bursts forth,
And chases the night away,

Then is the moment for the soul to renounce;
An it doeth then, a radiant Light it becometh.

ஆன்மாக்கள் எண்ணற்ற பிறவி பிறந்திறக்கின்றார்கள். அஞ்ஞானப் பெருக்காலே அதனை மறந்து விடுகின்றார்கள். மல இருளால் குழப்பெறுகின்றார்கள். அந்நிலையிலே மறைந்து நின்ற சிவனருள் உதயமாகின்றது. அந்தக்காலந்தான் துறத் தற்குரிய பருவம். அவ்வாறு பருவத்தே துறக்கின்ற ஆன்மா சுடரொளியாகத் திளங்குகின்றது.

### இறைவன் துறந்தவர் பிறவியறுப்பான்

### The Lord sunders the birth bonds of the Renunciate

44. அறவன் பிறப்பிலி யாரும் இலாதான்
உறைவது காட்டகம் உண்பது பிச்சை
துறவனுங் கண்டீர் துறந்தவர் தம்மைப்
பிறவி யறுத்திடும் பித்தன் கண்டீரே.

He is the Dharma, He is birthless, Kinless;
In the wilds he abides, by alms he lives;
Know ye, He hath renounced all;
And to all those who renounceth,
He sundereth their bonds of birth
The insensate one! Know ye thus.

இறைவன் தர்ம சொரூபி; பிறப்பினையறியாதவன்; கிளை யாருமில்லாதவன்; அவன் தங்குவது (சுடு) காட்டகத்தில்; அவன் உண்பது பிச்சை; மாபெருந்துறவி; துறந்தவர் பிற வியை அறுக்கும் பித்தன் - என்று அறிக.

### துறத்தவர் நெறியில் நிற்பாராக

### The renunciate shall walk in the straight path

45. நெறியைப் படைத்தான் நெருஞ்சில் படைத்தான்
நெறியில் வழுவின் நெருஞ்சில் முட்பாயும்
நெறியில் வழுவா தியங்க வல்லார்க்கு
நெறியின் நெருஞ்சில்முட் பாயகி லாவே.

He laid the path, and planted the thorns along;
An thou from the path deviate
The thorns of temptation shall prick thee;
They that deviate not,
The thorns shall prick not

துறவியர் செல்லவேண்டும் நெறியினை இறைவன் வகுத்தான். வழியின் இருபுறமும் நெருஞ்சி முள்ளையும் நட்டு வைத்தான். நெறிதவறியவர்களை நெருஞ்சி முள்குத்தும். தவருதவர்கள் பயணத்தை நலமே முடிக்கலாம்.

குறிப்பு. 1. நெருஞ்சில் – மயக்குகின்ற உலக ஆசாபாசங்கள்.

### தவஞ்செய்த கொள்கையில் நிற்க
### Stand stead fast in the goal of tapas

46. கேடுங் கடமையுங் கேட்டுவந் தைவரும்
நாடி வளைந்தது நான்கட வேனலேன்
ஆடல் விடையுடை அண்ணல் திருவடி
கூடுந் தவஞ்செய்த கொள்கையன் ருனே.

Spotting my failings, demanding me of tribute,
The five senses in ambush held me;
That indeed is not of my seeking;
Firm in tapas, I stand;
Seeking the hallowed feet of the dancing Lord,
That on the sacred bull rideth.

என் தீவினைகளைத் தெரிந்துகொண்டு, திறைசெலுத்தும்படி வேண்டி, ஐம்புலப் பகைவர்களும் வந்து வளைந்து கொண்டார்கள். அதற்கு நான் எவ்வாறு பொறுப்பு? நான் செய்வதெல்லாம், அம்பலக்கூத்தாடும் விடையுகந்த பெருமான் திருவடிகளை அடையும் கொள்கையில் உறுதியில் நின்று தவம் செய்து கொண்டிருப்பதே.

———

(தொடரும்)

# முருகன் குறும்பு

திரு. பி. செந்தில்நாயகம் அவர்கள்,
புளியங்குடி.

---

ஈரேழ் உலகினையும் படைத்தும் காத்தும் திரிபவரும், வேதனும் நாரணனும், நயனங்கள் மூன்றுடை நாதனும் போற்றுகின்ற அன்னை அம்பிகை. அவள் புது மலர்த்தாள் அல்லும்பகலும் அழியா அரசும் செல்லும் சிவநெறியும், சிவ லோகமும் அருளுவதுமல்லாமல், வஞ்சப்பிறப்பை உடைத்து, உள்ளமுருக்கும் அன்பையும் கொடுக்கவல்லது. அன்பர் என்பவர்க்கு தனம், கல்வி, ஒருநாளும் தளர்வறியா மனம், நெஞ்சில் வஞ்சமில்லா மனைவி மக்கள் இதுபோன்ற நல்லன எல்லாம் தருகின்ற ஈகையுடையாள்.

தாமரைசேர் நான்முகற்கும் மாற்கும் அறிவரியா உருவு பல கொண்டு ஒருவராய் நின்றவர் ஈசன். ஆதியும் அந்தமும் இல்லாதவர். மலைமகளை ஒரு பாகம் வைத்தலுமே, மற் றொருத்தி சலமுகத்தால் அவன் சடையில் பாய்கின்ற காரணத் தான், அழல் உருவாய் நிலமுதல்கீழ் அண்டமுற தென்பால் உகந்தாடும் தில்லைச் சிற்றம்பலவனை "பெண்பால் உகந்தான் காண்" என்கின்றார் மணிவாசகப் பெருமான். இதையே அபிராமிப்பட்டர் "விழியால்மதனை அழிக்கும் தலைவர் அழியா விரதத்தை அண்டமெல்லாம் பழிக்கும்படி ஒருபாகம் கொண் டாளும் பராபரையே" என்கின்றார்.

அம்மை, கருத்தரியாது பூமியையும் வேறுபல கோளங் களையும் தோற்றுவித்து என்றும் அழியாத கன்னியாய் இளமை யோடும் எழிலோடும் இருக்கின்றவள். ஈசனும் பிரம்மச்சாரி, எனினும், அம்மையப்பருக்கு குழந்தைகள் இருவர். கண பதியும் முருகனும். இவர்கள் இறைவனில் வேறல்லர். கணபதி ஐந்துகரத்தன், யானை முகத்தன். தென்னங்காயும்,

ஏனலின் இடியும், தேனும், முக்கனிபலவும், பாகும், மோதகமும் சுவைத்தநிம்பாலும் விரும்புகின்றவன். அவன்தாள் மேல் அன்போடு பரிந்து போற்றுபவர்க்கு வேண்டும் பரிசுகள் கொடுப்பவன். அவனை வழிபடாதவர்க்கு இன்னல் விளைவிப்பவன். அவனைத்தொழாதவர்கள் அமுதம் எழுமென்று கடலைக்கடைய, நடுமத்தம் குலைந்து விழுந்தது. தந்தையேயாயினும், விநாயகப் பெருமானை முன்னிட்டுக் கொள்ளாமல் திரிபுரசம்ஹாரத்துக்குப் புறப்பட்டார் மூவர்க்கும் முதல்வனும் மூர்த்தி. தேரின் அச்சு முறிந்தது. இதனை "தச்சு விடுத்தலும் தாமடியிட்டலும், அச்சு மு[illegible]ந்ததென்றுந் தீபற" என்று வேடிக்கையாகவும் விநயமாகவும் சொல்கிறார் மணிவாசகர்.

இராவணன் தன் தவமகிமையால் சிவபெருமானிடமிருந்து பெற்றுவந்த சிவலிங்கத்தை, விநாயகப் பெருமான் அந்தணச் சிறுவன் உருவில் வந்து வாங்கி அதைத்தரையில் வைக்க, இராவணன் பெயர்த்தெடுக்க முடியாமல் வெகுண்டு சிறுவனைக்குட்டவும் அடிக்கவும் ஓடிப்பிடித்தான். சிறுவன் தன் சுயஉருக் கொண்டு துதிக்கையால் அவனைப்பிடித்து இழுத்துப் பந்தாடினர். இவர்க்கு இது ஒருவிளையாட்டு.

முருகன் என்றும் இளையோன், அழகன். தேவர் கலி தீர்க்கவந்த தேவசேனபதி. இவர் சின்னஞ்சிறு பிள்ளை, பூலோகம் எங்கும் புகழும் பிள்ளை. தடவரையில் சேரடிக்க அலையடிக்கும் செந்தில் குறத்திக்கு மாப்பிள்ளை. இவர் ஓர் குறும்பன். அவ்வைப் பிராட்டியிடம் "சுட்டபழம் வேண்டுமா சுடாதபழம் வேண்டுமா ?" என்று நகையாடி வினவி அவர்பாட்டை விரும்பிக் கேட்டவர். தினைப்புனம் காத்த மொய்தார் அணிகுழல் வள்ளியை விருத்தன் வேடம்பூண்டு, முதல்வனும் தந்தி முகத்தெந்தையின் உதவியால் வதுவை செய்தவர். 'ஓம்' எனப்படும் ஓரெழுத்துண்மையை உணராத அயனின் நான்முகங்களும் குலுங்கக் குட்டி, அவனைச் சிறையிலிட்டார் செவ்வேழ். "அதன் பொருள் உனக்குத் தெரியுமா?" என்ற தாதையின் திருச்செவியில் உண்மைப்பொருளை உபதேசித்தார். அவர் திருவிளையாடல்களில் மலைகள் இடம்

பெயரும், கடல்கள் ஒன்றுகும். சந்திரன் சூரியமண்டலத்திலும் சூரியன் சந்திரமண்டலத்திலு மிருப்பார்கள்.

பிள்ளைப்பருவத்தில் அண்ணன்தம்பிகள் சண்டையிட்டுக் கொள்வது இயல்புதானே. கணபதியும் கந்தனும் விளையாட்டாய்ச் சண்டையிட்டுக் கொண்டதாய் ஒரு கற்பனை. கைலையில் அம்மையப்பர் வீற்றிருக்கின்ற ஒருசமயம். விநாயகர் அங்கு தோன்றி "அப்பா என்னுடைய காதுகளை அறுமுகனுகிய தம்பி நோகுமாறு கிள்ளினுன்" என்று கூறி வருத்தப்பட்டார். சிவபெருமான் வேலனைப் பார்த்து "ஏன் அப்படிச் செய்தாய்" என்று விரைவாகக் கேட்டார். "அண்ணன் என்தலையில் உள்ள கண்களை எண்ணிப்பார்த்தான்" என்றுன் முருகன். தேம்பி அழுதிடும் கணபதியைப் பார்த்து "நீ ஏன் அவ்வாறு செய்தாய்" என "என்துதிக்கையின் நீளத்தினை எத்தனை முழங்கள் இருக்கின்றன என்று தம்பி அளந்து பார்த்தான்" என்று கணபதி சொல்ல முருகன் அதைக்கேட்டு நகைத்து நின்றுன்.

அம்பிகையை நோக்கி அரன் "உன் மைந்தர்களின் குறும்புச் செயல்களைப்பார்" என்று கூற அம்பிகை கணபதியை அருகில் அழைத்து ஆறுதல் சொல்லி மனமகிழ்ச்சி அடைந்தார்.

மேற்கண்ட கருத்துள்ள பாடலைப் பாடியவர் "நிரோட்டயமகம்" பாடி தூஷித்தலையே இயல்பாகக் கொண்ட திருச்செந்தூரில் வசித்துவந்த ஒரு புலவரை அடிமையாக்கிய கற்பனைக் கருவூலமாம் சிவப்பிரகாச சுவாமிகளாகும். அப்பாடலைக் கீழே காண்போம்:—

"அரனவன் இடத்திலே ஐங்கரன் வந்துதான்
ஐய? என்செவியை மிகவும்
அறுமுகன் கிள்ளினுன்" என்றே சிணுங்கிடவும்,
அத்தன் வேலவனை நோக்கி
விரைவுடன் வினவவே, 'அண்ணன் என் சென்னியில்
விளங்குகண் எண்ணினன்' என
வெம்பிடும் பிள்ளையைப்பார்த்து 'நீ அப்படியும்
விகடம் ஏன் செய்தாய்?' என

(தொடர்ச்சி அடுத்த பக்கம் பார்க்க)

# புலவர் என்போர்.....?

வித்துவான். திரு. சிவ. சோமசுந்தரம் அவர்கள்,
காஞ்சிபுரம்.

---

உலகில் பல மொழிகள் தோன்றி பல்லோ லும் பேசப் பட்டும் எழுதப்பட்டும் வருகின்றன. அம்மொழிகளுள் காலத்தால் முற்பட்டும், இலக்கிய, இலக்கண வளம் செரிந்த மொழியாக இருத்தலினாலும் தமிழ் மொழி உயர் தனிச் செம் மொழி என ஆன்றோர்களால் பாராட்டப்பட்டது; இன்றும் தனிச் சுடர்விட் டொளிர்கின்றது. நந்தமிழ் மொழியின்கண் பல இலக்கியங்கள் தோன்றி நம்மை யெல்லாம் அறிவுக் கட லினுள் விளையாடச் செய்த பெருமை புலவர்கட்கே உரிய தாகும். புலவர் என்போர் யாவர்? அவர் திறம்தான் என்னே? என்பதைப்பற்றி இக்கட்டுரையில் காண்போம்.

பழுமரம் நாடிச் செல்லும் பறவையினங்களைப் போல புரவலர்களை நாடி, புலவர்கள் காடு பல கடந்து தன் நாவல் லமைக்கு ஏற்பப் பாடி பெற்றதைக் கொண்டு மகிழ்ந்து சுற் றத்தினருக்கும் உணவளித்து காத்து வந்தனர், புலவர்கள் விரும்புவது புகழ் ஒன்றேயாகும். அவர்கள் புகழ் எனின்

---

(முன்பக்கத் தொடர்ச்சி)

'மருவும் என் கைந்நீளம் முழம் அளந்தான்' என்ன
மயிலவன் நகைத்து நிற்க,
மலையரையன் உதவவரும் உமையவளை நோக்கி 'நின்
மைந்தரைப் பாராய் எனக்
கருது அரியகடல் ஆடைஉலகுபல அண்டம்
கருப்பமாய்ப் பெற்ற கன்னி,
கணபதியை அருகு அழைத்து அகமகிழ்வு கொண்டனள்
களிப்புடன் உமைக் காக்கவே!

---

உயிரும் கொடுப்பர்; பழியெனில் உலகத்தையே ஈவதாக இருந்தாலும் அதனைப் பெறமாட்டார்கள். அத்தகைய சீரிய நோக்கத்தையுடையவர்களே புலவர்கள். புலவர்கள் செய்ந் நன்றி மறவாதவர்கள்; இன்னு செய்தார்க்கும் இனியவே செய்யும் பண்புடையவர்கள். தாம் பெற்ற இன்பம் பிறரும் பெறவேண்டும் எனும் பரந்த நோக்க முடையவர்கள் புல வர்கள். இத்தன்மையுடையவராக புலவர்கள் இருத்தலினுல் தான் ஔவையாருக்கு அதியமான் நெல்லிக்கனியை ஈந்தான். அதியமான் தனக்குக் கிடைத்த ஒரு நெல்லிக்கனியைத் தான் உண்டு வாழ்வதால் நாடு நலமடைவதை விட ஔவையார் நாட்டில் பல ஆண்டுகள் வாழ்ந்தால் நாடு நலம் பல பயக்கும் என நினைத்து அந்நெல்லிக் கனியைத் தமிழ் மூதாட்டியாகிய ஔவையாருக்கு ஈந்து சிறப்படைந்தான். "நன்றி மறவேல்" என்னும் நற்கருத்தை நாட்டிற்கு நல்கியவளாகிய ஔவை பெருமாட்டி அதியமானை செய்ந்நன்றிமறவாத உள்ளத்தோடு "நீலமணிமிடற்று ஒருவன் போல மன்னுக பெரும!" என்று வாழ்த்தியருளினுர்.

புலவர்களின் உள்ளம் கற்பனைக் களஞ்சியம்; கருத்துக் கருவூலம்; "உள்ளுவ தெல்லாம் உயர்வுள்ளல்" என்னும் விழுமியக் கொள்கையையுடையது எனக்கூறின் அது மிகை யாகாது. மொழி என்னும் கல்லினிலே பாடல் என்னும் சிற் பத்தினை உண்டாக்கிய சிற்பிகள் தான் புலவர்கள். புலவர்கள் அன்று பாட்டாக வரைந்த ஓவியம் தான் இன்று அன்றைய பண்பாட்டைத் தெளிவு படுத்தும் நிலைக்கண்ணுடியாகப் பயன் படுகின்றது.

பிரமன் தசையினுலும், நரம்பாலும், எலும்புகளாலு மான உயிர்களைப் படைக்கின்ருன்; புலவன் சொல் நயமும் பொருள் நயமு முடைய பாடல்களைப் படைக்கின்ருன். பிரமனுல் உண்டாக்கப்பட்ட உடல் அழியும் தன்மை யுடையது ஆனுல் புலவனுல் உண்டாக்கப்பட்ட பாடல்கள் நீண்ட காலம் அழிவதில்லை. எனவே புலவனே சிறந்தவன் என்று பழந்தமிழ்ப் பாடலொன்று கூறுகின்றது.

"அமிழ்தம் இயைவதாயினும் தமியர்உண்டலும் இலரே" எனும் பகுத்துண்டு பல்லுயிர் ஓம்பும் மனப் பாங்கு புலவ

னிடத்தில் இருந்ததினல் தான் பண்டைய புலவர்கள் ''யாதும் ஊரே யாவரும் கேளிர்'' என்ற உயர்ந்த நோக்கம் கொண்டு வாழ்ந்து வந்தனர்.

நலங்கிள்ளிக்கும், நெடுங்கிள்ளிக்கும் நடைப்பெற்ற போரில் ஒரு பயனும் காணுது மக்கள் அல்லல்படும் நிலைமையை நெடுங்கிள்ளிக்கு எடுத்துக்கூறி திருத்த முயன்ருர் கோவூர் கிழார் என்னும் புலவர். அம்மட்டோடு இருந்து விடாமல் இருவரையும் சந்தித்து, ''நீவிர் இருவ்ரும் சண்டையிட்டால் இருவரும் வெற்றி பெருதல் என்பது நடவாத காரியம். இருவரில் ஒருவர் தோற்பது நிச்சயம். இருவரும் ஆத்திப் பூவாலாகிய மாலையையே அணிந்து இருக்கின்றீர். எவர் தோற்பினும் நமது குடி தோற்றது என்னும் இழி பெயரை நும்குலத்துக்குத் தேடித் தராமல் இன்றே போரை நிறுத்தி விடுங்கள்'' என்று கோவூர் கிழார் வேண்டிக்கொண்டார். அதன்படி இருவரும் போரை நிறுத்திவிட்டனர். இதனல் முற்காலப் புலவர்கள் சமாதானம் செய்து ஒருமைப் பாட்டை வளர்த்தனர் என அறியலாம்.

புலவர்கள் எதையும் அஞ்சாது எடுத்துக் கூறும் ஆற்றலுடையவர்கள். அதன் காரணமாக இடுக்கண்பல நேரினும் தாங்கும் ஆற்றல் படைத்தவர்கள்.

புலவர்கள் அறிவுரை கூறி அரசர்களை ஆட்சிசெய்யச் செய்தனர் என்பதை பெருந்தலைச் சாத்தனுர் பாடிய பாடலால் அறியலாம். இவர், செல்வத்தையெல்லாம் துறந்து கானகம் சென்றிருந்த குமணனிடம் பரிசில் கேட்க சென்ற போது அங்கு, ''தன் தலைதான் இருக்கின்றது, இதை அறுத்து எடுத்துக்கொண்டு சென்ருல் என் தம்பி இளங்குமணன் பொருள் தருவான். பெற்றுக் கொள்ளுங்கள்'' என்று கூறி தன் உடைவாளை ஈந்தான் குமணன். அதையேந்தி இளங்குமணனிடம் சென்று, '' இவ்வுலகத்தில் தாம் வாழ நினைத்தவர் தம்புகழை இவ்வுலகின் கண் நிலைநிறுத்தி மாய்ந்தனர். பெருஞ் செல்வர்கள் இதனை அறியார். பரிசிலன் வாடிச்செல்லுதல் நாடிழந்ததினும் துன்பமான செயல் என எண்ணியே உன்

தமையன் என்னிடம் வாளைக் கொடுத்தனன்'' எனக்கூறிய பெருந்தலைச் சாத்தனாரின் கருத்துக்குச் செவிசாய்த்த இளங் குமணன் புலவருடன் கானகமேவி அண்ணனைக் கண்டு தன் தவற்றை பொறுத்தருளும்படி வேண்டியதுடன் மீண்டும் நாட்டிற்கு வந்து ஆட்சி செய்யச் சொன்னான். இத்தகைய செயலெல்லாம் புலவரின் நாவன்மையினாலன்றோ முடிந்தது.

புலவர்கள் அரசரிடத்தில் அவைக்களப் புலவராக இருந்து வந்ததோடு மட்டுமல்லாமல் தூதும் சென்று வந் தார்கள் என்பதை ஔவையார் அதியமானின் பொருட்டு தொண்டைமானிடம் தூது சென்று வந்தார் என்பதால் அறியலாம்.

புலவர் என்போர் தான் பெற்ற இன்பம் பெருக இவ் வையகம் என்னும் சிறந்ததொரு கோட்பாட்டை உடை யவர்கள். தான் எவ்வரசனிடம் சென்று பொருளைப்பெற்று வந்தாரோ, அவ்வரசனின் பெருமையைக்கூறி, இருக்குமிடம் கூறி அவ்விடத்தில் சென்று அரசனைக் காண்பாயாக என்று தான் வழியில் காணும் புலவரிடம் ஆற்றுப்படுத்தினார்கள் புல வர்கள். கேட்டறிந்த புலவர்களும் அரசனிடம் சென்று பொருளைப் பெற்று இனிது வாழ்ந்தனர்.

தான் செய்த தவற்றை கரந்துரையாமல் வெளிப்படை யாகக் கூறும் சிறந்ததொரு மனப்பான்மை புலவர்களிடம் இருந்தது. ஒரு முறை சோழன் நலங்கிள்ளியின் தம்பியான மாவளத்தானும், தாமப்பல் கண்ணனார் என்னும் புலவரும் வட்டாடிக் கொண்டிருந்தார்கள். அவ்வேளை புலவர் கை கரந்தனர். எனவே அரசன் வட்டு கொண்டு புலவர்மேல் எறிந்தான். சினமுற்ற புலவர் சோழனைப்பார்த்து "நின் பிறப்பில் ஐயம் உடையேன் யான்'' எனக்கூறினார். இச் சொல்லைக் கேட்டு யாதொன்றும் கூறாது தன்நிலையை எண்ணி அடக்கமே உருவானான் மாவளவன். அந்நிலையைக் கண்ட புலவர், அரசன் தன் தவற்றை உணர்ந்தான்; அடக்கமே உருவானான். நான் என் தவற்றை உணரவில்லை எனக்கே கோபம் மேலிட்டது. அதனால் யானே தவறுடையன் எனக்

(தொடர்ச்சி அடுத்த பக்கம் பார்க்க)

# கலியுகக் கடவுள்

பால்மனம் கொண்ட முருகா
பசியைத் தீர்த்திட வருவாய்
பழநியில் எழுந்த முருகா
பக்தனைக் காத்திட வருவாய்
கலியுகக் கடவுளே முருகா
கர்மத்தைப் போக்கிட வருவாய்
கருணையின் வடிவமே முருகா
கல்வியைத் தந்திட வருவாய்
செந்தில் வேலனே முருகா
செல்வத்தைச் சேர்த்திட வருவாய்
சேவற்கொடி யுடையோனே முருகா
சேவையைப் புகழ்ந்திட வருவாய்

திரு. சந்திரவாணன் அவர்கள்,
No. 30, கிழக்குநஞ்சய முதலி தெரு,
கரூர்.

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

கூறி மாவளவன் காவிரி மணலினும் பல்லாண்டுகள் வாழ்க என வாழ்த்தி நின்றார் புலவர்.

நந்தமிழ் நாட்டு புலவர்களின் திறத்தை சொல்லவும் அரிதே. "நெற்றிக் கண் காட்டினும் குற்றம் குற்றமே" என மொழிந்த நக்கீரர், புலவர்களுக்கெல்லாம் சிறந்த யெடுத்துக் காட்டாக இருந்ததனால் "புனைதரும் இலக்கியப் புலவர் சிங்கம்" எனப் போற்றினார் சிவப்பிரகாசர்.

புலவர்களின் திறனால் உண்டாக்கப்பட்ட இலக்கியச் செல்வங்களை தாம் பெற்ற பெரும் பேருகக் கருதி, அவைகளைப் படித்து பரந்த மனப்பான்மையுடன், நற்செயல்கள் புரிந்து நல்வாழ்வு வாழ்வோமாக.

உ

சிவ சிவ

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் வெளியீடு :—

ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் அருளிச்செய்த

# கந்தர்கலிவெண்பாவும் சகலகலாவல்லிமாலையும்

(தெளிவுரையுடனும் ஆங்கிலம் இந்திமொழி பெயர்ப்புகளுடனும்)

*ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் 280 ஆம் ஆண்டு மகேசுவர பூசை வெளியீடு*

*திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஜுனியர் வித்துவான்* முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் அவர்களால் *வெளியிடப்பெற்றது*

(பெரிய எழுத்தில், உயர்ந்தரக வெள்ளைத்தாளில்.)

கந்தர்கலிவெண்பா – ஆங்கில மொழிபெயர்ப்பு

*வாரணாசி இந்து பல்கலைக்கழகம்*

டாக்டர். திரு. K சிவராமன் அவர்கள் M. A.,

சகலகலாவல்லிமாலை – ஆங்கில மொழிபெயர்ப்பு

ஸ்ரீ M. அருணாசலம் அவர்கள் M. A.,

கந்தர்கலிவெண்பா; சகலகலாவல்லிமாலை-இந்தி மொழிபெயர்ப்பு — *அலகபாத் பல்கலைக் கழகத் தமிழ் விரிவுரை யாளர்* ஸ்ரீ ரங்கநாதாசாரியார் அவர்கள் சிரோமணி M.A.B.O.L.

[மொத்த பக்கங்கள் 182. பிரதி ஒன்றுக்கு விலை ரூ. 1–25.]

தபால் கட்டணம் வேறு. 20 பிரதிகள் ஏககாலத்தில் வாங்கு வோருக்கு 20% கழிவு உண்டு.

*பாக்கிங் சார்ஜ் – ரயில்வே கட்டணம் வேறு.*

திருக்குறள், பரிமேலழகர் உரையுடன் கூடியது.

பிரதி ஒன்றுக்கு விலை ரூ. 2–25. தபால் கட்டணம் வேறு.

*20 பிரதிகள் ஏககாலத்தில் வாங்கினால் 20% கழிவு உண்டு.*

பாக்கிங் சார்ஜ், ரயில்வே கட்டணம் வேறு.

கிடைக்குமிடம்.

ஸ்ரீ T. M. குமரகுருபரன் பிள்ளை B. A., B. L.,

*ஸ்ரீ குமரகுருபரன் சங்கம் தலைவர்,*

*ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் மடம் மானேஜிங் டிரஸ்டி,*

ஸ்ரீவைகுண்டம்.

*(திருநெல்வேலி ஜில்லா)*

S. இந்தியா.

# அன்பு

**திரு. மா. மாரிகோவிந்தன் அவர்கள்,**
**தமிழ் ஆசிரியர், உ. பெ. மு. ஆ. பள்ளி,**
**புதுகூரைப்பேட்டை.**

---

இப்பரந்த பூவுலகில் எண்ணற்ற மொழிகள் பேசப் படினும் தமிழ் மொழிக்குறிய சிறப்பும் செல்வாக்கும் வேறு எம்மொழிக்கும் இல்லை என்பது தொன்மை வாய்ந்த திருமுருகாற்றுப்படையும்,பரிபாடலும் நன்கு விளக்குவதுடன் சைவ சமையக் குரவர்களான நால்வரின் சொல்லும் இதற்குச் சான்று. முடியுடைய மூவேந்தர்களும், பாரி, அதியமான் போன்ற வள்ளல்களும் போற்றிப்புகழ்ந்தது நம் தமிழ் மொழியே. மேலும் இயல், இசை, நாடகமென மூன்று பிரிவால் செழித்தோங்கும் நம் தமிழ் மொழியில் வள்ளுவப் பெருமான் நமக்கு அளித்த பொதுமறையான திருக்குறளை பல மதத்தினரும் விரும்பி ஏற்பதோடு எண்ணற்ற தமிழ் மலர்கள் பல நாடுகளிலும் பல மொழிகளிலும் இனிய மணம் வீசி இணையிலாப் புகழ் பரப்பக் காண்கிறோம். நக்கீரர், சேக்கிழார், அருணகிரிநாதர் போன்ற தமிழ் அறிந்த சான்றோரால் தமிழ் பரப்பத் திருவுளங் கொண்ட இறைவனே தமிழில் முதல் அடி எடுத்து கொடுத்தார் எனின் நம் தமிழ் தாயின் அருமை பெருமையை என்னென்பது.

இனிமையும் நீர்மையும் தமிழெனலாகும் என்பது நிகண்டு. சொல்லில் இனிமையும் தனிமையும் மிகுதியான பொழுது அது செஞ்சொல். ஆகிறது. தமிழுக்கே உரிய தனிப்பெருமை செஞ்சொல். அருணகிரிநாதர் செந்தில் திருப்புகழில் நான்கு திசைகளைப் பற்றி கூறவரும்போது ஏனைய திசைகளை மேல்திசை, கீழ்திசை, வடதிசை எனக்கூறி தென் திசையை மட்டும் பொதுவாக தென்திசை எனக்கூறுமல்

செஞ்சொல்மாதிசை என்கிருர். பெருமை மிகுந்த திசை என குறிப்பிட வேண்டி மாதிசை என்கிருர். செஞ்சொல் என்பது தமிழ் என்பது பொருள்.

> செஞ்சொல் புனேமாலே சிறந்திடவே. (அனுபூதி)
> தமிழ் மாருதமே

என்பது சேக்கிழாரின் கூற்று.

> தகைக்குந்தனி திகைக்குஞ்சிறு தமிழ் தென்றலி.
> (திருப்புகழ்)

எனவே தமிழ் தென்றல், தமிழ் வழங்கும் திசை தென்திசை அத்திசை தரும் காற்று தென்காற்று, என்பது. அதுபோல பக்தி என்பது வடசொல், அன்பு என்பது தென்சொல். அறிவில் சிறந்த சான்ருேர்கள் நான்கு யுகங்களிலும் நான்கு வழிகளில் முத்திப் பெற்றனர் என்பது பல நூலில் காணக் கிடக்கின்றது. அவை ஞானம், தானம், யாகம், பக்தி என்ப தாகும்.

இறைவன் அன்புக்குக் கட்டுப்படுபவன்.அன்பே அவன் அருளேப்பெறும் வழி, அன்பே அடியார்க்கு அடியார் ஆகும் தன்மை எனக்கூறவந்த வள்ளலார்

> அன்பெனும் பிடியுள் அகப்படும் மலேயே
> அன்பெனும் குடில் புகும் அரசே
> அன்பெனும் வலேக்குள் படுபரம் பொருளே
> அன்பெனும் கரத்தமர் அமுதே
> அன்பெனும் கடத்துள் அடங்கிடும் கடலே
> அன்பெனும் உயிர் ஒளிர் அறிவே
> அன்பெனும் அணுவுள் அமைந்த பேரொளியே
> அன்புருவாம் பரசிவமே. அருட்பா

மேலும் கூறவந்த இராமலிங்கர்,

> அன்பர் திருவுளம் கோயிலாக் கொண்ட
> அற்புத சிற்சபை ஓங்கும் அரசே,

எனவும்

> அன்பருளக் கோயிலே அமர்ந்தருளும் பதியே

எனவும் பாடுவதைக் காண்மின்.

இறைவன் இடையரு அன்பையும் நிறைபொருளும் தரும் அருளாளன் என்பது தெரிந்தும் புலவர்கள், அழியும் செல்வமுடையவர்பாற் சென்று அருமை பெருமை நிறைந்த இனியதமிழை அன்புகலந்து இறைவனுக்கு அற்பணியாமல் அற்பலோபிகளும் மகாமூடர்களுமான பரமலோபிகளைப் பாடி பரதவிக்கும் அவல நிலையைக் கண்டு அருணகிரிநாதர் தம் திருப்புகழில் பலஇடங்களில் வருந்துவதைக் காண்கிறோம், கேட்டபோது கேட்டதனைத்தையும் தரும் கற்பகத் தருவான பரம கருணாநிதியான முருகனைப் பாடினால் இகம் பரம் இரண்டு நலன்களையும் வழங்குவானே. அப்பரமனை அன்புருக வாழ்த்தக்கூட வேண்டாம், அழகிய தமிழால் வைதாலும் வாழவைப்பவன், ஈயாதலோபிகளிடம் தந்தையே! தாயே! தெய்வமே! ஆதரிக்கும் வள்ளலே! எனப்புகழ்ந்து பாடினும் அரைக்காசுகூட தரமாட்டார்கள். செந்தமிழ் தெய்வமான, ஆறுமுகப் பெருமானை இலக்கண இலக்கிய நயத்துடன் பாடாவிடினும் அன்பு உளத்தோடு, பித்தன் பெற்றபிள்ளை, நீலி மகன், தகப்பன் சாமி, பெருவயிற்றான் தம்பி, பேய்ச்சி முலையுண்ட கள்வன் மருகன், குறத்திகணவன் என ஏசினாலும் இன்னருள்புரியும் பரம கருணாநிதி யல்லவா ?

அத்தனீ எமதருமை அன்னைநீ தெய்வநீ
　　ஆபத் தகற்றி அன்பான்
ஆதரிக்கும் கருணை வள்ளல்நீ மாரன்நீ
　　ஆண்மையுள விஜயன்நீ என்
றெத்தனை விதஞ்சொலி உலோபரைத் தண்டமிழ்
　　இயற்றினும் இரக்கஞ் செயார்
இலக்கண இலக்கிய கற்பனை கவியால்
　　இறைஞ்சி எனை எத்தவேண்டாம்
பித்தனொடு நீலியும் பெறுதகப்பன் சாமி
　　பெறுவயிற்றான் தம்பியும்
பேய்ச்சி முலையுண்ட கள்வன் மருகன்வேடுவப்
　　பெண்மணவன் என்றேசினும்
சித்தமகிழ் அருள்செய்தும் என்றேமுழக்கல் போல்
　　சிறுபறை முழக்கி யருளே
செம்பொன் நகருக்கினிய கம்பை நகருக்கிறைவ
　　சிறுபறை முழக்கியயருளே

*கம்பை முருகன் பிள்ளைத் தமிழ்*

சுந்தரமூர்த்தி நாயனார் கூட பாடுகிறார்,

> மிடுக்கிலாதானை வீமனே விறல் விஜயனே வில்லுக்
> கிவனென்று
> கொடுக்கிலாதானைப் பாரியேயென்று கூறினும் கொடுப்பாரிலை
> பொடிக் கொண்மேனியெம் புண்ணியன் புகலூரைப்பாடுமின்
> புலவீர்காள்
> அடுக்குமேல் அமருலகம், ஆள்வதற்கியாதும் ஐயுறவில்லையே

அன்பு இல்லாத ஒருவன் மனிதனாக மாட்டான் எனவே வள்ளுவப் பெருந்தகை அன்பு இல்லாத ஒருவனை பிணத்தினும் கேடாக என்பு தோல் போர்த்த உடம்பு என்கிறார்

> அன்பின் வழியது உயிர்நிலை அஃதிலார்க்கு
> என்பு தோல் போர்த்த உடம்பு குறள்.

தம்மனத் தகத்தே அன்புபெருக ஊனினை உருக்கி உள் ஒளி வளர்க்க மணிவாசகப் பெருந்தகை கூட,

> ஆடகச்சீர் மணிக்குன்றே இடையறா அன்புனக்கென்
> னூடகத்தே நின்றுகத் தந்தருள்

எனவும்

> என்பு நைந்துருகி நெக்கு நெக்கேங்கி
> அன்பெனும் ஆறு கரையதுபுரள,

அருள்புரிய வேண்டி நிற்பதைக்காண்கிறோம். ஆகவே அன்புளம் கொண்டு அவனருளில் கலந்த இராமலிங்கர் எத்துணையும் பேதமுறாது எவ்வுயிரும் தம்உயிர் என்று எண்ணி ஒத்துரிமை கொண்டோரின் மனத்தகத்தே ஆனந்த நடனமும் அருளமுதம் பொழியும் அற்புத திருக்கோலமும் கொண்டு ஆட்கொளும் அம்பலத்தரசே எனக்கு அன்பிலா நெஞ்சமளித்தாய் அதனால் அடியேன் படும்பாடு உன் திருவுளம் அறியும் எனக் கூறும்போது நாம் எம்மாத்திரம்-எனவே அன்புளம் கொண்ட திண்ணப்பர் கண்ணப்பர் ஆனதும் திருநீற்றன்பு கொண்ட மெய்ப்பொருள் நாயனார் முத்திப்பெற்றதும் அன்பின் பொருட்டே என உன்னி அம்பலத்தாடும் ஈசனின் மலர் மிசையேகி மாணடியைத் தொழுது அவன் புகழ்பாடி அன்புளம் வேண்டி நிலமிசை நீடுவாழ்வோமாக.

---

# காலக் கணிதம்

திரு. A. இராசமாணிக்கம் அவர்கள்,
உதவி ஆசிரியர்,
ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் உயர்தொடக்கப்பள்ளி,
திருப்பனந்தாள்.

---

*(மலர் 19 இதழ் 4 பக்கம் 204ன் தொடர்ச்சி)*

## இதழ் 2.

**சங்கிராந்தி புண்ணிய காலம்:-**

சென்ற சித்திரை இதழில் வருஷங்களையும் வருஷப் பிறப்பு மாதப்பிறப்பு முதலியவற்றால் ஏற்படுகிற நவ நாயகர் களைப்பற்றியும் கூறப்பெற்றன. மாதப்பிறப்பை மாத சங்கி ரமம் என்றும் சொல்வதுண்டு. சௌரமான வருஷ நாள் கணக்கின்படி கலிசுத்ததினம் கண்டதை 7ஆல் வகுத்து வந்த மீதியைச் சுக்கிராதியாய் எண்ணிக் கண்ட நாள், நாழிகை, விநாடியில் சித்திரை மாதம் பிறக்கிறது. இந்தக் கீலக ஆண் டுக்குக் கலி சுத்ததினத்தை 7ஆல் வகுத்து வந்த ஈவு போக மீதி நின்றது நாள் 1, நாழிகை 6, விநாடி 15. இத்துடன் சித்திரை மாத வாக்கியம் 30 நாள் 55 நாழிகை 32 விநாடி யைச்சேர்க்க 32 நாள் 1 நாழிகை 47 விநாடி வருகிறது. இதை 7 ஆல் வகுக்க ஈவு 4 போக மீதி 4 நாள் 1 நாழிகை 47 விநாடி வருகிறது. இதைச் சுக்கிராதியாய் எண்ணச் சுக்கிரன், சனி, ஞாயிறு, திங்கள் போகச் செவ்வாய்க்கிழமை யில் 1 நாழிகை 47 விநாடியளவில் ரிஷபரவி சங்கிரமமாகிறது. இவ்விதம் ஒவ்வொரு சௌரமாத வாக்கியத்தையும் சேர்த்து அந்தந்த மாத சங்கிரம காலத்தை அறியலாம்.

| மாதம் | நாள் | நாழி | விநாடி | மாதம் | நாள் | நாழி | விநா |
|---|---|---|---|---|---|---|---|
| சித்திரை | 30 | 55 | 32 | ஐப்பசி | 29 | 54 | 7 |
| வைகாசி | 31 | 24 | 12 | கார்த்திகை | 29 | 30 | 24 |

| ஆனி | 31 | 36 | 38 | மார்கழி | 29 | 20 | 53 |
|---|---|---|---|---|---|---|---|
| ஆடி | 31 | 28 | 12 | தை | 29 | 27 | 16 |
| ஆவணி | 31 | 2 | 10 | மாசி | 29 | 48 | 24 |
| புரட்டாசி | 30 | 27 | 12 | பங்குனி | 30 | 20 | 21¼ |

இவையெல்லாம் சேர்ந்தது நாள் 365, நாழி 15, விஞடி 31, தற்பறை 15 ஆகும்.

ஒருமுறை கலிசுத்ததினம் கண்டபின் இந்தமாத வாக்கியங்களைச் சேர்த்துக் கொள்ளலாம். கலிசுத்ததினம் சுலபமாக அறிவதற்கு நவக்கிரக ஸ்புடம் கூறும்போது எழுதப் பெறும். இனி, சங்கிரம புண்ணியகாலத்தைக் கவனிப்போம்.

மேஷமாசம், துலாமாசம் சங்கிரமமாகும் காலம் விஷு புண்ணியகாலமாகும். ரிஷபமாசம், ஸிம்மமாசம், விருச்சிக மாசம், கும்பமாசம் சங்கிரமமாகும் காலம் விஷ்ணுபதியாகும். மிதுனமாசம், கன்னிமாசம், தனுர்மாசம், மீனமாசம் சங்கிரமமாகும் காலம் ஷடசிதியாகும். மகரமாசம் சங்கிரம காலம் உத்திராயண புண்ணிய காலமாகும். கடகமாசம் சங்கிரம காலம் தெக்ஷுணயண புண்ணிய காலமாகும்.

தெக்ஷுணயணத்துக்கு 20 நாழிகைக்கு முன்னும், உத்திராயணத்துக்கு 20 நாழிகைக்குப் பின்னும், விஷுவுக்கு முன்னும் பின்னும் 10 நாழிகையும் புண்ணிய காலமாகும்.

அர்த்த ராத்திரிக்கு முன் சங்கிரமமானுல் முதல் நாள் பகலிலும் அர்த்த ராத்திரிக்குப்பின் சங்கிரமமானுல் மறுநாள் பகலிலும் புண்ணிய காலமாகும்.

**மகரசங்கிராந்தி புருஷலெட்சணம்:—**

தைமாசப் பிறப்பு அல்லது மகரசங்கிரமத்தை உத்திராயண புண்ணியகாலம் என்பர். அன்று சூரியன் வடக்கே பிரயாணம் செய்யத் தொடங்குவார். இந்த மகர சங்கிராந்தியை மக்கள் சிறப்புடன் கொண்டாடுகின்றனர். இந்த மகர சங்கிராந்தி தேவதையின் அவையவமாவது ஸ்திரி புருஷ ரூபமாய் இரண்டுமுகமும் மூன்று கண்களும், நான்குவாயும் சிவந்த தந்தமும், நீண்டநாவும் தொங்குகிற புருவமும், நீண்டகாதும் எட்டுக் கைகளும் இரண்டு கால்களும் செம்பட்டை மயிரும் விகாரமான கருப்பு சரீரத்துடன் 12 யோசனை

பருமனும் 100 யோசனை உயரமும் கோர ரூபமாய் உள்ள தோற்ற முடையது.

இவ்வித சங்கிரம தேவதையின் நாமதேயம், ஜாதி, அபிஷேகம், சாமரம், குடை, வாத்தியம் முதலியவற்றை மாதம் பிறந்த கிழமையாலும்; வஸ்திரம், ஆபரணம், கந்தம், புஷ்பம், பாத்திரம், போஜனம், வாகனம், ஆயுதம் முதலியவற்றை மாத சங்கிர காலத்தில் என்ன கரணமோ அந்த கரணத்திற்குள்ளதாலும்,முகம்நோக்கும் திக்கை அன்றய நக்ஷத்திரத்தின் இராசியாலும் குறிப்பிடப்படுகிறது.

**வாரத்தால் வருபவைபாவன:-**

ஞாயிறுக்கு நாமதேயம் கோரன், ஜாதி பிசாசு, அபிஷேகம் சுத்த ஜலம், மதுஸ்னனம், சாமரம், மாணிக்கம், குடை ரக்தபத்திரம், வாத்தியம் மத்தளம் ஆகும். இவ்விதமே மற்றைய வாரங்களுக்கும் நாமதேயம், ஜாதி, அபிஷேகம், சாமரம், குடை, வாத்தியம் முறையே திங்களுக்கு துவாங்கிசி, பிதுர்தேவ, பால், ரவுப்பியம், சுவேதம், தாளம், செவ்வாய்க்கு மகோதரி, வனவிரசி, கரும்பஞ்சாறு, பிரவாளம், டமரகம். புதனுக்கு மந்தன், சூத்திரா, வில்வதீர்த்தம், சியாமளம், முத்தம், துந்துபி, வியாழனுக்கு மந்தாகினி, வைசியா, மஞ்சள்நீர், ஏமம், இரசிதம், ருத்திரவீணை. வெள்ளிக்கு மித்திரன் க்ஷத்திரியா, தயிர், படிகம், சுவர்ணம், வேணி, சனிக்கு இராச்சசன், பிராமணு, கங்காதீர்த்தம், நீலம், ரவிப்பியம், மகாபேரி.

இரண்டாவது கரணத்தால் வருவதைக் கவனிப்போம். கரணங்கள் பதினொன்று. அவற்றின் பெயர்களாவன:- பவம், பாலவம், கௌலவம், தைதுலை, சுரசை, வனசை, பத்திரை, சகுனி, சதுஷ்பாதம், நாகவம், கிமுஸ்துக்கானம் ஏ்ன்பன வாம். இவை பஞ்சாங்கத்தில் 5வது அங்கமாக வருவதாகும்.

(1) மகாசங்கிராந்தி பவகரணத்தில் வந்தால் அந்த் சங்கிராந்தி தேவதை வெள்ளை ஆடை உடுத்தி வெள்ளைக் குடையுடன் மாணிக்க ஆபரணம் அணிந்து, கையில் வீணையேந்தி கஸ்தூரி பூசி புன்னைமலர் சூடி தங்க பாத்திரத்தில் க்ஷீரான்னம் புசித்து ஸிம்மவாகனம் ஏறி புன்சிரிப்புடன் கிழ் திசையாகப் பிரயாணம் செய்யும். (மற்றய கரணங்களுக்குப் பின் எழுதுவோம்)

(தொடரும்)

# மாணிக்க வாசகர் என் வாழ்முதல்!*

திரு. ம. வே. பசுபதி அவர்கள்,
(S/o Thiru K. M. Venkataramiah avl.)
திருப்பனந்தாள்.

---

ஆன்ற பெருமை அவையத்தீர் !
அன்பிற் பிணைந்த பாவலர்காள் !
சான்ற துறவுப் பேரொளியே !
சாற்று கின்றேன் என்வணக்கம்.
இன்னும் காலம் கடத்தாமல்
இனிதே விரைவில் முடித்திடுவேன்
அன்பாற் பொறுத்தே கேட்கவென
அருளா ஏர்காள் ! வேண்டுகிறேன்.

தேனினிக்கும்; தீந்தமிழின் திறமினிக்கும்; நினைத்தாலும்
ஊன்இ னிக்கும்
மேனியெலாம் புளகமுறும்; மெய்சிலிர்க்கும்; பத்தியில் கண்
நீர்வ டிக்கும்
பானிலவாய் மாணிக்க வாசகர்என் வாழ்முதலென்
றேத்திப் பாட
நானினிய தவஞ்செய்தேன் ? தகுதியுள கொல் எனவே
நகைத்துக் கொண்டேன்.
முதலற்றுக் கடன்வாங்கி வாழ்க்கையினைத் தள்ளுகிற
மூடர்க் குள்ளே
முதலவன்நான்; எனக்குமொரு நிலையான வாழ்வுதரும்
முதல்கி டைத்தால்
கதையென்று விடுவேனோ ? கற்பனையென் றுரைப்பேனோ ?
கனவென் பேனோ ?
இதைவிரித்துச் சொல்வதற்கே இங்குவந்தேன்; பிழையிருப்பின்
பொறுத்த ருள்வீர் !
வேற்றவர்தான்; கிறித்தவர்தான்; என்றாலும் போப்பையர்
விரும்பி ஏற்று

மாற்றமிலா மொழிபெயர்ப்பால் தம்மொழியின் வளம்பெருக்கி
வாழ்வு கொண்டார்
கூற்றுக்கும் அஞ்சாத மேன்மைதரும் மணிமொழியை
என்வாழ்க் கைக்கும்
ஏற்ற(ம்)மிகத் தருகின்ற முதற்பொருளென் றுரைப்பதினுல்
பிழையென் சொல்வீர்!
என்தலைப்பை இருபிரிவாய் வினுவிடையாய் நயமுறவே
பகுத்துப் பார்ப்போம்
என்தலைப்பு 'மாணிக்க வாசகர்என் வாழ்முதல்'என்
றுளது கண்டீர்
இன்தலைப்பை இத்தலைப்பை 'மாணிக்க வாசகர் என்?'
எனவி னுவாய்
இன்பளிக்கும் "வாழ்முதலே" எனவிடையாய் மறுப்பின்றிச்
சொல்ல லாமே!

(வேறு)

மாண்புடைய இப்பகுப்பால் மாணிக்க வாசகனுர்
காண் முதலாம் யாவர்க்கும் காண்

(வேறு)

பத்திக்கும் முதலாகி, வாழ்க்கைக் காட்டில்
பதைப்பார்க்கும் முதலாகி, நெஞ்ச ஏட்டில்
சித்திக்கும் முதலாகி, இரண்ட றங்கள்
செய்வார்க்கும் முதலாகிப், பாவ லர்க்கும்
மெத்தபுகழ் முதலாகி, நாற்றம் வீசி
மிளிர்வதுபோல் ஏமாற்றும் மாய வாழ்வாம்
கத்து(ம்)அர சியலுக்கும் முதலே ஆன
கவிஞனைநம் முதலென்ருல் பிழையொன் றுண்டோ?
புள்ளினங்கள் கலகலக்கும் விடியல் நேரம்
பொற்கோயில் நண்ணிஅதோ அடியார் போந்து
பள்ளியெழுச் சிப்பாடல் பாடு கின்ருர்
போற்றுகின்ருர் ஆன்மாக்கள் விழிப்புக் கொள்ள
உள்ளமொன்றி 'வாழ்முதலே!' எனவி ளித்தார்
உவகைதரு மாணிக்க வாச கர்க்கே

அள்ளுமெழிற் சிவபெருமான் முதலாம் என்ற
அறிவுடையார் உரைபொருளை உண்மை யாக்க.

போற்றியென் வாழ்முதல் - விளக்கம்.

முதற்கடவுள் எனமுதலில் பொருள்உண் டாகும்
முதலாகும் வாழ்க்கைக்கே எனவும் ஆகும் !
பதமாகப் போற்றல் என் ? முதல்நீ தானே !
போற்றுதலே நின்கடனே எனலும் ஆகும் !
சதமாக வாழ்என்றே நெஞ்ச வேட்கை
சாற்றுதலால் எளிவந்த புகழ்வும் ஆகும்
விதவிதமாய் இவ்வாறுப் பலபொ ருள்கள்
விளங்கிடவே அத்தொடரால் விளித்தார் மேதை !
நம்முதலாப் பெருந்துறையார் தம்மைக் கண்டோம்
நாடும்நம் துரையான முதலா ளிக்கே
அம்பலத்துக் கூத்தாடி கணக்குப் பிள்ளை !
அவர்தானே வாசகத்தைச் சுவடி செய்தார் !
வெம்பலிலா அளகைநகர்க் குபேர னுக்கும்
விதிவசத்தால் வறுமைநிலை வருதல் கூடும்
நம்முதற்கு வறுமைவர வழியே இல்லை !
நமக்கேது வையகத்தில் கவலை இன்னும் ?
காசினையே முதல்என்று காசி னுக்குள்
கருதுகின்ற இழிவழக்கம் நுழைந்த தென்றோ !
மாசில்லா அருட்செல்வம் கல்விச் செல்வம்
மகிழ்வூட்டும் செவிச்செல்வம் கவிதைச் செல்வம்
ஆசியுடன் முத்திதரும் அன்புச் செல்வம்
அத்துணையும் செல்வம்தாம் இதைஅ றிந்தால்
தேசினிய மாணிக்க வாச கத்தேன்
திருச்செல்வம் நம்முதல்என் றெருப்புக் கொள்வோம்
அரைக்காசுக் காகஒரு குத்து வெட்டுஇங்கு !
அப்பப்ப இதுஎன்ன நாடா காடா ?
நிறையற்ற வாசகரே முதல்; இஃ(து) எற்று
நிலைத்துறையும் மேதைகளின் பெயர்த்தொ குப்பை

அறைகின்றேன் கேட்டேனும் வாச கத்தை
அறிந்தேற்கும் வாசகராய் ஆதல் வேண்டி,
நிறைகுடங்கள் துளும்பாமல் போற்றிச் சொன்ன
நித்திலங்கள் இரண்டொன்று காட்டு கின்றேன்.

**மாணிக்க வாசகரை முதலாகக் கொண்டவர்களில் சிலர்கருத்துக்கள்:—**

திருக்களிற்றுப் படியாரைப் படியார் உய்யார்!
'திருவாத வூரர்தே' [1] என்னும் அஃதே.
திருவாத வூரரன்பை விரும்பி ஏற்கும்
திருநாளென் நாளெனபர் தாயு மானார் [2].
மறுவற்ற ஆசிரியப் பத்துத் தந்து
மனங்கசிந்தார் நான்மணியில் சிவப்ர காசர்!
திருராம லிங்கர்ஆ ளுடைய மாலை
எனப்பத்துப் பாக்களினை இவர்க்கே ஈந்தார்.
கச்சியப்பர் பரஞ்சோதி இனையோர் போற்றிக்
கசிந்துருகும் ஒருமுதல்நம் முதலும் ஆகி
இச்சிக்க இலங்குமெனின் இனிதே நாமும்
இச்சகத்தில் வாழ்வாங்கு வாழ லாகும்
நச்சுகின்ற மணிமொழியார் தம்மைத் தாமே
நாயென்றே சொல்கின்றார்; பணிதல் செய்யும்
மெச்சுகின்ற பெருமையெனும் குறட் [3] கருத்தை
மேதினிக்குக் காட்டும்அவ் வழியே செல்வோம்!

**அவரும் நாமும்**

அவபுராணம் நாம்செய்வோம்; சிவ புராணம்
அவர்செய்வார்; மனம்கீறும் தீய காண்போம்!

---

1. *பாய்பரியோன் தந்தப் பரமானந் தப்பயனைத்*
*தூயதிரு வாய்மலரால் சொற்செய்து – மாயக்*
*கருவாதை யாமறியா வாறு செய்தான் கண்டாய்*
*திருவாத வூராளும் தே.* —திருக்களிற்றுப் படியார் 73

2. *போதவூர் நாடறியப் புத்தர்தமை வாதில்வென்ற*
*வாதவூர் ஐயன் அன்பை வாஞ்சிப்ப தெந்நாளோ ?*

3. *பணியுமாம் என்றும் பெருமை; சிறுமை*
*அணியுமாம் தன்னை வியந்து* — திருக்குறள். பெருமை.

அவர்கீர்த்தித் திருவகவல் அளித்தார் அன்பால் !
அசைகின்ற பிண்டத்தின் பகுதி நாமே
அவர்அண்டப் பகுதியினை அளித்த வள்ளல் !
அனைவரையும் தூற்றியேநாம் அகவல்[4] செய்வோம்
அவர்போற்றித் திருவகவல் அமைத்த மேதை !
அவரன்றோ நம்முதலா யிருக்க ஏற்றார் !
கருச்சதகம்[5] மேலும்நாம் காணல் உண்டு
திருச்சதகம் அவர்கண்டார்; நாமோ என்றும்
பொறுப்பற்றுப் பொய்யொன்றே நாளும் காண்போம்
புகழ்மெய்யே அவர்கண்டார்[6]; காட்ட வல்லார் !
விருப்புற்றுக் கைமாற்றுப் பெற்றே ஏய்ப்போம்
விழைவற்றார் கைம்மாறு கருத[7] வல்லார் !
திருச்சதகத்(து) இவைபலவாச் சொன்ன அந்தத்
தெய்வமன்றோ நம்முதலா யிருக்க ஏற்றார் !
நீத்தலின்றி நிதம்பிறக்க எண்ணு வோம்நாம்
நீத்தலுக்கு விண்ணப்பம் செய்தார் அன்னார் !
காத்(து) அழிப்போம் உடற்சக்தி; அன்னார் பாவை[8]
கனிப்பாவால் உயிர்சக்தி போற்று கின்றார் !
நாத்தழும்ப அம்மானைப்[9] புகழ்வோம் நாமே
நாயர்மேல் அம்மானை நவின்றார் அன்னார் !
நாத்திகர்க்கும் பொன்சுண்ணம்[10] நல்கும் அந்த
நாதரன்றோ நம்முதலா யிருக்க ஏற்றார் !
திருக்கோத்து[11] மலைவோர்க்குத் திருக்கோத் தும்பி
திருக்கற்ற[12] அறிவுக்குத் திருத்தெள் ளேணம்

---

4. அகவல் – கூவுதல்
5. கருச்சதகம் – நூறு பிறப்பு
6. மெய்யுணர்தல்; அருவமுமான பரம்பொருளை – உருவமுமாகக் குருவடிவில் கண்டவர்
7. கைம்மாறு கொடுத்தல்
8. பாவை – திருவெம்பாவை;
9. அம்மானை – அழகிய பெண்ணை
10. திருப்பொற்சுண்ணம்;
11. திருக்கோத்து – செல்வத்தால் இறுமாந்து
12. திருக்கற்ற – நல்லறிவை உணர்ந்த;

திருக்(கு)[13]ஆழத் திருச்சாழல்; வாழ்வின் போக்கைத்
திருப்புதற்கே அருளியுள்ளார் திருப்பூ வல்லி !
கருவுந்தல்[14] வீழ்த்து,திரு வுந்தி; மாதர்
களிப்பினிலும் தோணேக்கம், இறைமை நோக்கம் !
இரும்பூசல் வாழ்வினர்க்குப் பொன்னூல் வூசல்[15]
இவரன்றோ நம்முதலா விருக்க ஏற்றார் !
மிகத்தாழ்வன் நைப்பித்து[16] மீளா அன்னோர்
மீள்வதற்கே அன்னைப்பத் தளித்தார் கண்டீர் !
யுகமெல்லாம் துயில்பித்துக் கொண்ட வர்க்கும்
இதோவென்றே குயிற்பத்து ஞானம் நல்கும் !
சகத்தீர்!நம் வாழ்முதலா இவற்றைக் கண்டால்
சிவபெருமான் பத்தங்கம்[17] உணர்வோம்; பின்னர்
நகைமுத்து மாணிக்க முதலும் தங்கள்
நன்முதலாம் முழுமுதலைக் காட்டக் காண்போம் !
பள்ளியையே வாழ்வாகக் கொள்ளும் கீழோர்
பள்ளியெழுச் சிப்பாடல் படித்தால் ஆன்மாத்
துள்ளியெழப் பேரின்பம் நாடு வார்கள்
தூய்மனத்தீர் ! பேரவையீர் ! இதையும் கேட்பீர்!
வள்ளலெனும் வாதவூரர் பாவைப் பாடல்
வளர்'இந்தோ னிசியா'வில் முடிபுனைநாள்
எள்ளலின்றிப் பாடுதலை அறிந்தி ருப்பீர்
ஏன்றோநாம் அதன்பெருமை உரைக்க வில்லை !

---

*13. திருக்கு – திமிர்*
*14. கருவுந்தல் – பிறப்பு;*
*15. திருப்பொன்னூசல்*
*16. நைப்பித்து – துன்பம் கொடுத்து;*
*17. பத்தங்கம் – திருத்தசாங்கம்.*

---

** 17—3—68 அன்று திருப்பெருந்துறைக் கவியரங்கத்தில் பாடப் பெற்றது.*

# மணிவாசகரின் மாண்புறு உவமைகள்

வித்துவான். திரு. பி. ரா. நடராசன் அவர்கள்.

(முன் இதழ் 6-ன் தொடர்ச்சி)

**உவமை 14**

'பிறிவினை யறியா நிழலது போல்' (78)

**உவமை 15**

'அன்பெனும் ஆறு கரையது புரள' (81)

**உ. போ. நி.**

தப்பா மேதாம் பிடித்தது சலியாத்
தழலது கண்ட மெழுகது போலத்
தொழுது உளம் உருகி அழுதுஉடல் கம்பித்து
ஆடியும் அலறியும் பாடியும் பரவியும்
கொடிறும் பேதையும் கொண்டது விடாது எனும்
படியே யாகிநல் இடையறு அன்பில்
பசுமரத்து ஆணி அறைந்தாற் போலக்
கசிவது பெருகிக் கடல்என மருகி
அகங்குழைந்து அனுகுல மாய்மெய் விதிர்த்துச்
சகம்பேய் என்று தம்மைச் சிரிப்ப
நாணது ஒழிந்து நாடவர் பழித்துரை
பூணது வாகக் கோணுதல் இன்றிச்
சதுர்இழந்து அறிமால் கொண்டு சாரும்
கதிஅது பரமா திசயம் ஆகக்
கற்று மனம் எனக் கதறியும் பதறியும்
மற்று ஓர்தெய்வம் கனவிலும் நினையாது
அருபரத்து ஒருவன் அவனியில் வந்து
குருபரன் ஆகி அருளிய பெருமையைச்
சிறுமை என்று இகழாதே திருவடி இணையைப்
பிறிவினை அறியா நிழலது போல
முன்பின் ஆகி முனியாது அத்திசை
என்பு நைந்து உருகி நெக்குநெக்கு இரங்கி
அன்பு எனும் ஆறு கரையது புரள (59-81)

**விளக்கம்**

தாம் கைக்கொண்ட பொருளை வெறுப்பினும், சலிப்பினும் விட்டு நீங்குதலன்றி அனல்பட்டு மெழுகு உரு

குவதுபோல உள்ளம் உருகி, தொழுது, அழுது, ஆடியும் அலறியும், பாடியும், பணிந்தும் கொடியோரும், அறிவற் றோரும் தாம் பிடித்ததை விட்டு விடாததுபோல இடையரு அன்பில் பசுமையான மரத்தில் இருப்பாணியை அடித்து இறக்கினுர்போல உறுதியுடையாராய் கண்ணீரைக் கடல் போலச்சிந்தி அகம்குழைந்து அனுகூலமாய் உடம்பும் நடுங்கி உலகத்தார் இவரைப் பேய்என்று தம்மைப் பழித்துக்கூற அதற்கு நாணுமலும், மனங்கோணுமலும் அவ்வுரையே ஆப ரணமாகப் பூண்டு சூழ்ந்து கூறும் உபாயங்களும் இழந்து, எல்லாவற்றையும் அறிந்து அறியாதார் போல் இருந்து அடை யப்பெறும் வீட்டினையே யாவற்றினும் சிறந்ததெனக்கருதி இளங்கன்றைத் தேடும் பசுப்போல மீளா அன்பினுல் கத றியும், பதறியும் வேறெருரு கடவுளைக் கனவிலும் நினையாமல் அருமையுடைத்தான வீட்டிற்குரியானுய் ஒப்பற்று விளங்கு பவன் இவ்வுலகில் தலைமைபூண்ட ஆசிரியனுக வந்து என்னை ஆண்டருளிய பெருமையைச் சிறுமையென்று எண்ணி இக ழாது தனக்கு முதலாகிய உருவை முன்னும் பின்னும் என்றும் தன்னை விட்டுப்பிரியாத நிழல்போல இருதிருவடிகளையும் எக் காலத்தும் வெறுப்பால் விட்டுநீங்காமல் தொடர்ந்து அத்திரு வடிகளிடத்தே என்பானது வலிமையற்று உருக அன்பென் னும் ஆறு கரைபுரண்டோடும்படி.

**விளக்கம்**

நெருப்பினேடு பட்ட மெழுகு உருகும் நிலையைக் கொள்க. சுடுசட்டியிற் போட்ட வெண்ணெய் உருகுமாப் போல என்று கொள்க. 'அழல்சேர்ந்த மெழுகே அன்னுர்' என்று திருச்சதகத்திலும் 'அழலுறும் மெழுகாம்' (செத்தி லாப்பத்து 4); 'அழல்சேர் மெழு(கு)ஒப்ப' (ஆசைப்பத்து 8); 'தீசேர் மெழுகொப்பாய்' (திருஎம்பாவை 7) கூறுவர். இவ் வுவமை கூறிய இப்பெருமானின் திருநூலாம் திருவாசகமும் இப்பெற்றித்தே! திருவாசகத்துடன் படுவார் நெஞ்சமும் உருகுமென்க. இந்நிலைபற்றியே இராமலிங்கனுரும் 'நான் கலந்து பாடுங்கால்' என்று கூறியதையும், துறைமங்கலம் சிவப்பிரகாச அடிகளார் 'தொடுமணற் கேணியிற் சுரந்து நீர் பாய' (நால்வர் நான்மணிமாலை 4. 10) எனக் கூறியதையுங்

காண்க. இதுபற்றியே 'திருவாசகத்திற்கு உருகார் வேறு ஒரு வாசகத்திற்கும் உருகார்' என்ற பழமொழியும் எழுந்தது போலும்! கொடியோரும், அறிவற்றோரும் தாம் பிடித்ததை விடார். 'முதலையும் மூர்க்கனும் கொண்டது விடா' என்னும் பழமொழித் தொடரும் இதனை வலியுறுத்தும். பற்றற்றான் பற்றினைப் பற்றும் நிலைக்கு விடாப்பிடியாகப் பிடிக்கும் இவ் வுவமையினும் வேறு கூற ஒல்லுமோ? இவ்வுவமையை முன்றுறையரையனார் தம் பழமொழியில் "மூர்க்கன்றான் கொண்டதே கொண்டு விடானாகும்" (பழமொழி 94) என்று கூறுவர். பசுமையான மரத்தில் ஆணியை அடித்தல் மிக எளிதாகும். ஆனால் அவ்வாணியை மீண்டும் மரத்தினை விட்டு நீக்கல் மிக அரிதாம். ஆணியை மரத்தினுள் அடித்து இறுக்கும் பொழுது மரத்தினின்று நீர் கசிவதைக்காணலாம். மனமாகிய மரத்தில் அருள் என்னும் ஆணியைத் திருவருள் என்னும் சம்மட்டியால் அறைந்து கொள்ளல் வேண்டும். அன்புடை யாரைக் காட்டிக்கொடுப்பது அவர்களின் கண்ணீரென்றல் லவா திருவள்ளுவர் தம் திருக்குறளில் 'அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர், புன்கண் நீர் பூசல் தரும்' (71) எனக் கூறியுள்ளார். எனவே நாம் இறைப்பற்று மிக்கோங்கி நிற்க அவனின் திருவருளையே துணையாகக்கொள்ளவேண்டும். இதனையே பெருமானார் 'அவன் அருளால் அவன்தாள் வணங்கி' எனத் திருவாய் மலர்ந்தருளினார். இளமையில் நாம் கற்கும் கல்வி பசுமரத்தாணி போன்றதாம். இந்நிலை பெற்ற ஒருவரை இந்நிலை பெறுதற்கரியராயினார், பெற்றாரை நோக்கி எளிதில் பேயென்று கூறி மகிழ்வர். தமக்குக்கிட்டா ஒன் றினையும் உலகிலுள்ள பெரியோர்களாம் சான்றோர்கள் கூறும் நல்லனவற்றையும் இல்லையென்று மறுப்போரை பொய்யில் புலவர் 'உலகத்தார் உண்டென்ப(து) இல்என்பான் வையத்து, அலகையா வைக்கப் படும்' (850) எனக் கூறுவதைக் கண்டு மகிழலாம். தாம் கொண்ட இலக்கை அடைய விழைந்தும், விரைந்தும் செல்லுபவர் பிறர்கூறும் பழிச்சொல்லைப் பொரு ளாகக் கொள்ளார். அதனால் அவர்கள் கவல்வதுமில்லை. பிறர் தூற்றிய சொற்களையே போற்றிப் புகழப்படும் சொற்களாக ஏன் பாமாலையாகக்கொண்டு அணிந்து மகிழ்வர் என்று

கூறும் அழகேஅழகு. தாம் கொண்ட நிலையை முடித்தற்கு விரும்பும் பெரியோர் அவமதிப்பை மேற்கொள்ளார் என் பதனை 'மெய் வருத்தம் பாரார்' எனத் தொடங்கும் நீதிநெறி விளக்கச் செய்யுளாலும் உணரலாம். நெடுங்கடலில் ஒருவர் சிறுகுச்சியினையோ, கோலையோ, போடுவாராயின் அக்கடல் அக்குச்சியினை யேற்றுக் கொள்வதே போலக் கொண்டு தன் அலைகளால் அக்குச்சியையும், கோலையும் கரையிலே ஒதுக்கு கின்றது. கடலுக்குக் குச்சி வேண்டாதது. சிறுகுச்சி 'தன் நெடிய நீர்மாட்சியின் கண்ணே வந்துற்றதே' எனக் கவலை கொள்ளாமல் தன்னகத்தே எஞ்ஞான்றும் நிகழ்ந்து கொண் டிருக்கும் அலைகளின் மூலமாய் அக்குச்சியை நீக்குகின்றது. அதேபோலப் பெரியோரும் தாம் எண்ணியது எண்ணியாங்கு நிகழ்ந்து கொண்டு வருங்காலத்தில் சிலர் கூறும் பழிச் சொற்களை ஏலார். கன்றினையுடைய பசு தன் கன்றினைக் காணுத போது ஆற்ருது அலறி மனம் பதைக்கும். அவ் ஆவின் பக்கத்தே நல்ல பசும்புல்லும், நல்ல பிண்ணுக்கிட்ட நீரும், வைக்கோலுமிருப்பின் அது அவற்றின்பால் விழையாது தன் கன்றினைத் தன் நாவினல் நக்கிக்கொடுத்து இன்பம் காணும் நிலைமையது. இதுபோன்றே இப்பெருமானிடத்தும் உலகியல் பொருள் இவர் அண்மைத்தேயிருந்தும் தான்பற் றிய-காண விழைந்த-பொருள் காணுமல் வருந்திக் கவன்று கண்களில் நீர் பெருகும் நிலையினைக் 'கற்ரு மனம் எனக் கதறியும் பதறியும்' என்ற வரிகளில் வகுத்துரைத்தார். இதே உவமையை நாலடிச் செய்யுளும் கைக்கொள்ளுகின்றது. அம்முறையையும் காண்போம்.

---

(தொடரும்)

# HYMNS OF THE TAMIL SAIVITE SAINTS

BY

F. KINGSBURY, B. A. (Madras)

AND

G. E. PHILLIPS, B. A. (Lond.), M. A. (Oxon.)

---

( மலர் 19. இதழ் 5-ன் தொடர்ச்சி )

## IV

## MANIKKA VASAHAR

(Sanskrit form MANIKYA VACHAKA)

93 விச்ச தின்றியே விளைவு செய்குவாய்
        விண்ணு மண்ணக முழுதும் யாவையும்
    வைச்சு வாங்குவாய் வஞ்ச கப்பெரும்
        புலைய னேனையுன் கோயில் வாயிலிற்
    பிச்ச னாக்கினாய் பெரிய வன்பருக்
        குரிய னாக்கினாய் தாம்வ ளர்த்ததோர்
    நச்சு மாமர மாயி னுங்கொலார்
        நானு மங்ஙனே யுடைய நாதனே.

93 Heav'n earth, and all that therein is, thou makest without seed.
Thou dost preserve and Thou destroy. Tis Thou who hast decreed
That I though treacherous, mean, should be a man who frenzied faints
Before Thy temple gates, one with the band of Thy true saints.
What men themselves have planted, e,en a poisonous mango tree,
They root not up. O Lord of mine, as such a tree keep me.

——— (To be continued.)

---

# கடவுள் சிந்தனை

வித்துவான், திரு. சிவ. கன்னியப்பன் அவர்கள்,
அரசினர் உயர்நிலைப்பள்ளி,
இராணிப்பேட்டை.

---

மனிதராகப் பிறந்த நாம் ஒவ்வொருவரும் கடந்த பொருளாகிய கடவுளைப்பற்றிப் பலவாறுகச் சிந்திக்க வேண்டும். அவனது புகழைப்பற்றிப் பேச வேண்டும். பலவாறுகப் பரந்து பட்டுக்கிடக்கும் அவனருட் திறத்தினை நினைந்து உருக வேண்டும். அங்ஙனம் நினைத்துச் சிந்தித்து உள்ளம் உருகிப் பார்ப்போமானுல் பிறந்த பிறப்பாகிய கட்டினை நீக்கி கடவுள் அருள் புரிவர் என்பது திண்ணம். இதனை மணிவாசகப் பெம்மான் திருவாசகத்தில்,

'கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்'

எனக் கூறுகின்ருர். நம்முடைய உடலானது பருத்து வளர்வதற்கு நாம் பலவகையான உணவுகளை உட்கொள்வதுபோல நம் உடலுக்குள்ளே இருக்கும் ஆன்மா செம்மையாக, தூய்மையாக இருக்க நாம் கல்வியறிவைப் பெறுவதோடு உளமாகிய மனதைத் தூய்மையாக்கிக் கொள்ள கடவுள் சிந்தனை மிக மிக வேண்டற்பாலதாகும்.

திசைகாட்டும் கருவி எப்பொழுதும் வடக்குத் தெற்கு நோக்கியே நிற்கக் காண்கின்ருேம். அதன்மீது எவ்வளவு விசையைச் செலுத்தினுலும் விசை ஒய்ந்த பிறகு வடக்கு தெற்கு நோக்கியே குறிமுள் நிற்கின்றது. அதுபோல நாம் எவ்வளவு இன்ப துன்பத்தினை அடைந்தாலும் கடவுள் சிந்தனையிலிருந்து சிறிதளவும் பிறழலாகாது. 'அரைநிமிட நேரமட்டில் நினையாதே'' என திருப்புகழில் அருணகிரியார் கூறு

வதுபோல இறைவனை அரை நிமிட நேரமாவது நினைந்துருக வேண்டும். "ஒருமையுடன் நினது திருமலரடி நினைக்கின்ற உத்தமர் தம் உறவு வேண்டும்" என இராமலிங்க அடிகளார் ஆண்டவனை வேண்டுவதுபோல நாம் இறைவனை வணங்கும் நேரத்திலாவது நம்மனம் ஒருமுகப்பட்டு இருத்தல் வேண்டும். ஈன்றெடுத்த தாயானவள் தன் குழந்தையை அடித்து விரட்டினுலும் அக்குழவி மீண்டும் மீண்டும் அத்தாயையே நினைந்து அழுவது போலவும், "எத்துனையும் வான் மறந்த காலத்தும் பைங்கூழ்கள் மைத்தெழுந்த மாமுகிலே பார்த்திருப்பது போலவும்" ஆண்டவன் நமக்கு எவ்வளவுதான் துன்பம் கொடுத்தாலும் அவனை மறவாதிருக்க வேண்டும். இதனையே குலசேகராழ்வார்,

> "தருதுயரந் தடாயேலுன் சரணல்லாற் சரணில்லை
> விரைகுழலூ மலர்ப்பொழில் சூழ்வித்துவக் கோட்டம்மானே
> அரிசினத்தாலீன்ற தாய் அகற்றிடினும் மற்றவள்தன்
> அருள் நினைந்தே அழுங்குழவி அதுவே போன்றிருந்தேனே'

என்கின்ருர்.

மணிவாசகப் பெருமான் திருவாசகம் - திருச்சதகத்தில்,

> "சிந்தனை நின் தனக்காக்கி நாயினேன் தன்
> கண் இணைநின் திருப்பாதப் போதுக் காக்கி
> வந்தனையும் அம்மலர்க்கே ஆக்கி வாக்குன்
> மணி வார்த்தைக் காக்கி ஐம்புலன்கள் ஆர
> வந்தனையாட் கொண்டுள்ளே புகுந்த விச்சை
> மாலமுதப் பெருங்கடலே மலையே உன்னைத்
> தந்தனை செந்தாமரைக்காடு அனைய மேனித்
> தனிச்சுடரே இரண்டு மிலித்தனிய னேற்கே."

என்கின்ருர். அதாவது எல்லாம் வல்ல பெருமானே! இருமையும் அறியாத என் மனம் முதலியவற்றை நினக்கே உரிமையாக்கி, என்னை அடிமைகொண்ட நின்கருணையின் பெருந்திறத்தினை என்னென்று புகழ்வது என்கின்ருர். மேலும், "சிவனவன் என் சிந்தையுள் நின்ற அதனுல் அவனருளாலே அவன்ருள் வணங்கி" என்றும் கூறுகின்ருர். "சித்தத்தை சிவன்பாலே வைத்தார்க்குமடியேன்" என்கின்றபடி, நம்முடைய சிந்தனைகளையெல்லாம் இறைவன்பால் செலுத்த வேண்டும். மனதை அடக்குவதென்பது கடினமானதொன்

ருகும் என்கின்ருர் தாயுமானவர். யானை, கரடி, புலி, சிங்கம் ஆகிய விலங்குகளையும் அடக்கிவிடலாம்; ஐந்து உலோகங் களையும் இரசவாதத் தொழிலினுல் வேறுபடுத்தலாம்; ஒருவர் காணுது உலகில் மறைந்து தனித்து உலவலாம்; நீர்மேல் நடக்கலாம்; நெருப்பின்மேல் நிற்கலாம்; ஆனுல் மனதை அடக்கிநிற்பதென்பது அரிதான செயலாகும் என்கின்ருர். இதனையே,

''சிந்தையை அடக்கியே சும்மா இருக்கின்ற
திறம் அறிது; சத்தாகி என்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே''

என்கின்ருர்.

ஒருவனுடைய மனம் தூய்மையுடையதாயிருக்க வேண் டும். மனம் தூய்மையாக இருக்குமாயின் தான் நினைத் தவைகளை யெல்லாம் நினைத்தபடியே அடைவர் என்பதை குறளாசிரியரும்,

''எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்''

என்கின்ருர். மேலும் இவர் உணர்த்துவதாவது,

''மனத்தானும் மாந்தர்க் குணர்ச்சி''
''மனநலம் மன்னுயிர்க் காக்கும்''
' மனநலத்தினுகும் மறுமை''

என்றும் வலியுறுத்திக் கூறுகின்ருர். பெருமையும் சிறுமையும் ஒருவனது சிந்தனையினுலேயே வருவன என்பதை நாலடியார் பின்வருமாறு கூறுகின்றது. அதாவது,

''நன்னிலைக்கட் டன்னை நிறுப்பானும், தன்னை
நிலைகலக்கிக் கீழிடு வானும், நிலையினும்
மேன்மேலுயர்த்து நிறுப்பானும், தன்னைத்
தலையாகச் செய்வானும் தான்''

என்பதாகும்.

ஒருவருடைய எண்ணத்தை, உள்ளக்கிடக்கையை மற் ெருருவர் அறிய வேண்டுமானுல் அதற்கு உதவியாயிருப்பது மொழியே யாகும். ஒருவரின் சிந்தனையும் அவர் வெளிப்

படுத்தும் கருத்துக்களும் மொழியின் மூலமாகவே நலம் பெறும் இதில் ஒன்றை விட்டு மற்றொன்றைப் பிரிக்கமுடியாது சிந்தனையில்லையாயின் ஆங்கே மொழியுமில்லை. மொழியில்லை யாயின் ஆங்கே சிந்தனையுமில்லை என்பதாம். ஆகையினால் ஒருவனுக்குத் தாய்மொழி வாயிலாகவே சிந்தனை எழும். அச்சிந்தனையின் தெளிவினாலேயே கடவுளைத்தொழவேண்டும் இதனைநாம் பட்டறிவு மூலம் கண்ட நிகழ்ச்சி யொன்றைக் காண்போம். சென்னையில் ஒருவர் இருந்தார். அவர் எனக்கு மிகவும் நெருங்கிய நண்பருமாவர். அவர் கடவுள் சிந்தனை என்பதே சிறிதுமில்லாதவர். அங்ஙனமே தம் வாழ்நாளில் பாதியைக் கழித்துவிட்டார். அஞ்சா நெஞ்சம் படைத்தவர். நாம் யாருக்கும் குடிமகனல்ல என்றும்; பிணியறியோ மென்றும் இறுமாந்திருந்தவர். ஓரமயம் அவருடைய மகனுக்குத் தீராநோய் வந்து விட்டது. பல மருத்துவ நிபுணரிடம் காட்டியும் குணமடையவில்லை. முடிவில் அரசாங்க பெரிய மருத்துவ மனையில் கொண்டுவந்து சேர்த்தார். அங்கும் குணங்காணாது கைநழுவ விட்டனர். அதுபோது கடவுள் சிந்தனையே அற்ற அவர், நம்மால் ஆவது இனியொன்றுமில்லை; எவ்வளவோ முழுமுயற்சி கொண்டு பார்த்தாகிவிட்டது; இனி என் செய்வது; எல்லாம் "கடவுள் சித்தம்" என்ற ஒரு முடிவான வார்த்தையைக் கூறினார். கண்திறவாமல் அசைவற்று போட்டக்கால் போட்டபடி இருந்த தன் மகன் சிறிது கண்ணைத் திறந்து பார்த்தான். கைகால் அசைவு ஏற்பட்டது. தூங்கிக் கண் விழிப்பவன் போல் குழந்தை கண் விழித்துப் பார்த்து அப்பா! என அழைத்தானும். அவர் கொண்ட பேரானந்த எல்லைக்கு அளவேயில்லை; ஆண்டவன் யாவருக்கும் இரக்கம் காட்டும் கருணையுள்ளம் படைத்தவர் எனவும் உலகத்து உயிர்களெல்லாம் கடவுளின் திருவருட் பெருங்கருணையினால் இயங்கிக் கொண்டிருக்கின்றன எனவும் உணர்ந்தார். இறைவனுடைய திருநாமத்தை உச்சரித்த மாத்திரத்தில் கிடைக்காத இன்பம் தமக்குக் கிடைத்ததைப் பற்றியெண்ணி வியப்புற்றார். இறைவனுக்கு என்னகைமாறு செய்வது என சிந்தித்தார். இக்கருத்துப்பட மணிவாசகப் பெருமான்,

''யாவருக்கும் மேலாம் அளவிலாச் சீருடையான்
யாவருக்கும் கீழாம் அடியேனை — யாவரும்
பெற்றறியா யின்பத்துள் வைத்தாய்க்கென் எம்பெருமான்
மற்றறியேன் செய்யும் வகை''

என்று கூறுகின்றார்.

இறைவன்பால் அன்பு கொண்டவருள் கண்ணப்ப நாயனார் ஒருவர். அவர் வேடர் குலத்திலே தோன்றியவர். வேட்டை யாடிவரக் கானகம் சென்றார். நெடுந்தூரம் வேட்டையாடி வந்தமையால் பசித்துன்பம் மேலிட்டது. தாம் வேட்டையாடிக் கொணர்ந்த பன்றியைச் சமைத்துத் தின்னலாமென்றால் தண்ணீரில்லை. பொன்முகலி ஆற்றிற்குச் சென்றார். காடனை சமைக்க விட்டுவிட்டு நாணனும் திண்ணனும் காளத்தி மலையின் உச்சியை அடைந்து குடுமித் தேவரைக்கண்டு வழிபட்டார்கள். கண்ணப்பர், காளத்தி நாதரை விட்டுப் பிரிய மனமில்லாமல் போவதும் வருவதுமாய் இருந்தார். தன் நினைவெல்லாம் சிந்தனையெல்லாம் எம்பெருமான் வசமாகிவிட்டது. ஆறே நாளில் முத்தி எய்தினார். 'தொண்டு செய்து நாள் ஆறில் கண் இடந்து அப்பவல்லேன் அல்லன்' என்று பட்டினத்தாரும், 'கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை' என்று மணிவாசகரும் கூறியுள்ளார்கள். மேலும் மணிவாசகர் ஆண்டவனைப்பற்றிக் கூறும்பொழுது, உன்னைப் பிரானாகப் பெற்றதினால் நான் பேரானந்தம் அடைந்தேன். என் சிந்தையினையே வாசம் செய்கின்ற ஒரு திருக்கோயிலாய்க் கொண்டாய். திருப்பெருந்துறையில் வீற்றிருக்கும் சிவனே! என் உடலினையே நீ வாழும் இடமாகக் கொண்டு விட்டாய்; யான் எத்தகைய கைம்மாறும் செய்தற்கு இயலாதவனாய் உள்ளேன் என்கின்றார்.

எல்லாம் வல்ல இறைவன் நெருப்பும் வெப்பமும் போலவும், மலரும் மணமும் போலவும், நீரும் தண்மையும் போலவும் உள்ளான். அத்தகைய இறைவன் அருளாசிரியனாக எழுந்தருளி வந்து தன் திருவடிகளை என்தலைமேல் வைத்து அருளினன். அத்தன்மையான சங்கரன் அம்மையுடன் நன் மக்கள் சிந்தையில் தங்கி என்றும் வாழ்க என வாழ்த்துவோ

*(தொடர்ச்சி அடுத்த பக்கம் பார்க்க)*

# ST. RAMALINGAR AS A RELIGIOUS REFORMER.*

**Thiru. P. Mutharasu Avl.,** M. A., B. T.,
Professor of Tamil,
Sri K. G. S. Arts College, Srivaikuntam.

( மலர் 19. இதழ் 6-ன் தொடர்ச்சி )

*Sathia Gnana Sabhai:*

The next step after practising Jivakarunyam, according to Sanmargam as enunciated by the Saint, is the realisation of God as the Eternal Light.[39] He erected, for this purpose a unique structure at Vadalur by the side of the Dharma Salai in the year 1871. In its erection, he has entirely departed from the usual modes of Temple construction. It is an octagonal structure, resembling a full-blown lotus flower, with the domed roof. The whole structure exhibits in entirety, his own conception and style.[40] The Collector of South Arcot District, Mr. J. H. Garstin, I. C. S. remarks that it is not an ordinary temple, the details of the worship in it being unusual.[41]

It is the replica of the human body which is eight spans by one's own hand. Instead of an idol, an oil lamp is kept in the sanctum sanctorum behind a glass plate and in front, seven curtains in different colours are hung. As the lamp shines through the glass, when

---

( முன்பக்கத் தொடர்ச்சி )

மாக. இக்கருத்தினையே திருவுந்தி ஆசிரியர் உய்யவந்ததேவ நாயனர்,

"சிந்தையின் உள்ளும்என் சென்னியி னுஞ்சேர
வந்தவர் வாழ்கவென் றுந்திபற
மடவாள் உடனேஎன் றுந்திபற."

என வாழ்த்துகின்றார்.

---

* A paper submitted to II World Tamil Conference.

the curtains are removed one after another, so also God, in the form of Eternal Light will shine from within our mind as soon as we are thoroughly and completely purged of all the spurious elements and inherent satanic forces This Sathia Gnana Sabhai is the temple of Humanity where all men and women can worship God in the form of Light[42] without any distinction whatsoever. Is not the worship in this temple, rational and universally acceptable ? Is not the description of the facts of life and soul's endeavour to realise God, in terms of the details or worship in the temple, graphic and inspiring? It is something plain, simple, practical and yet something beautiful and elevating.

The rituals common in other temples are not permitted here The Saint has even forbidden the offering of coconut and fruits and the use of loud trumpets and drums at times of festivals.[43] All persons who have given up the habit of killing and flesh-eating are free to enter its portals. There is not much to be seen here; but there is much to be felt, in spirit. And one who thinks for himself realising the all pervading Omnipotent, will never fall a victim to the confusing tangle of various religions and their conflicting dogmas.[44] The Saint, by means of this Temple of Humanity, tries to instil a sense of fresh courage and unity among the people and to rally them under the fundamental Truth which remains unassailable under any circumstance. Individual and collective forms of worship are acceptable, the way of worship being the whole-hearted singing of His Praise by reciting the devotional hymns. These are all new reforms propagated by the Saint with regard to Temple construction and worship without sacrificing any of the basic principles. Here,

there is no place for a permanent priest who will take the position of an intermediary between the Almighty and the devotee and who will chant mantras in a language un-understandable to the worshipper. The Saint has further prescribed that either a boy below twelve years or an old man beyond seventy-two may enter the sanctum sanctorum to cleanse the premises periodically.

*Other Reforms:*

He denounced in very strong terms all forms of superstition, viz. wearing ornaments in one's own ears and nose.[45] He has declared that the blind following of all that has been said in the puranic literature which is predominantly fictious, is fit only to be buried several fathoms deep[46] He has also preached against wars fought between countries resulting in the killing and maiming of countless men: against persistence of poverty in certain sections of the society and the practice of lending money demanding abnormal interest with a covetous intention of usurping others' properties He has also raised his voice against the ruthless rule of those who have no compassion towards the subjects under them He has also wished that persons of universal vision in search of God's Grace reign over this land.[47]

(To be continued)

## மேற்கோள் விவரக் குறிப்பு

39. A. C. Boquet: Comparative Religion: about idol. Page-15.
40. திருவருட்பா: கீர்த்தனைப்பகுதி: பக்கம் 136. ஆனந்தக் களிப்பு 6–4.
41. குறிப்பு எண்: 15–ஐப் பார்க்க.
42. திருவாசகம் – தேவாரம் [அப்பர்].
43. திருவருட்பா: 6–ம் திருமுறை: திருநெறிக்குறிப்புக்கள் – 16. (பழைய பதிப்பு)
44. – 6ம் திருமுறை: இடைப்பகுதி: பக்கம் 41 பதிகம் 7–7.
45. திருவருட்பா: உபதேசப் பகுதி: மகோபதேசம்: பக்கம் 138.
46. – 6ம் திருமுறை: இடைப்பகுதி – பக்கம் 41, பதிகம் 7–9.
47. – 6ம் திருமுறை முடிந்த பகுதி: பக்கம் 160, பதிகம் 36–5.



# பாவை நோன்பு

திரு ஸ்ரீராமநாமப்பரதேசி அவர்கள்,
3119. East Secqnd Street,
Pudukkottai – 1. (Trichy. Dt.)

---

**பா**வை என்பது உலகமாதா உமாதேவியின் திருப் பெயர். பாவைநோன்பை காத்யாயினி விரதமென்பர். உலகமே சக்தியால்தானே செயல்படுகின்றது. பரை, ஆதி, விருப்பு (இச்சை) அறிவு (ஞானம்) தொழில் (கிரியை) ஆகிய ஐந்து சக்திகள் உலகத்தைப் படைத்துக் காத்து மறைத்து அருளி அனுக்கிரகம் செய்கின்றன. எது நடந்தாலும் அவள் செயலே என்பர் பெரியோர். "கண்ணால் காண்பது முதல் மூச்சு விடுவது வரை யாவும் உன் செயலென்றே எண்ணு கின்றேன். அப்படியிருக்கத் தவறு நேர்ந்தால் என்னுடையது என எவ்வாறு ஏற்றுக்கொள்ளுவேன் தாயே! சாப்பிடத் தான் வேண்டுமென்று அன்னை வற்புறுத்தியதற்காக அதிக மாகச் சாப்பிட்ட குழந்தையை, அன்னையே அதிகமாக ஏன் உண்டாயெனக் குற்றங்கண்டு கோபிப்பது போலாகுமன்றோ என்னைக் கோபிப்பது? குற்றம் செய்யவும் உதவியுள்ளது நீ தந்த சக்தியன்றோ" என்கின்றார் ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர் அவர்கள் தனது ஆனந்த சாகரஸ்தவம் என்ற நூலிலே.

> காண்பதுவும்: உயிர்ப்பதுவும் முதல் எவையும் உன்செயலாக்
> கருதாநின்றேன்
> பூண்பதினி எத்தவற்றை என்னுடையது எனத்தாயே!
> [illegible]சிப்பாயென்ன,
> உண்பரிந்து தாய்கொடுத்ததுண்ட சிறுகுழந்தையின்
> மீதூண்குற்றம்
> காண்பவர் யார்இவ்வுலகில் கடம்பவனப்பவனமமர்
> கயற்கண்ணாளே.

— *ஆனந்தசாகரஸ்தவம்–ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர்*

— *தமிழாக்கம் கோவை, மகாவித்வான் நடேசக்கவுண்டர்.*

காத்யாயனி விரதம்நோற்றுக் கண்ணனையடைய உருக்குமணி முயன்ருள் எனக்கூறும் பாகவதம்,

> கன்னி நன்னகரினெய்தி கன்னயாவுயிர்க்கும் அந்தன்
> கன்னியந் துளவுசூடுங் கண்ணனே கணவனுக
> கன்னி நீயருள்செய்கென்று கண்ணுதல் வேட்குங்கோங்கை
> கன்னியை உலகமீன்ற கன்னி ஆங்கேத்தினுளால்
>
> — செவ்வைசூடுவார் — பாகவதம்.

இவ்வாறு பாவைநோன்பு நோற்கும் கன்னியரின் சம்பாஷணை களாகவும் தோத்திரங்களாகவும் பாடிய பாடல்களையே பாவைப்பாட்டு என்பர். சிவபெருமானைச் சிந்திக்கும் வகை யில் மாணிக்க வாசகரால் பாடப்பெற்ற பாடல்கள் இருபது, திருவெம்பாவை என்ற பெயராலும் திருமாலைக் குறித்து ஆண்டாள் பாடிய முப்பது பாடல்கள் திருப்பாவை என்ற பெயராலும் வழங்குகின்றன. பாவையர் கணவனை வேண் டியும் நாட்டிற்கு நல்ல மழை வேண்டியும் பாடிய பாடல்கள் இவை.

பாவைநோன்பு என்பது இறைவனையடைய முயலும் தவமாகவும், பாவையரை அடியாராகவும், பாவையர் வேண் டும் கணவன் கடவுள் எனவும், பொய்கையென்பது இறை வனது அருட்பெருக்கு எனவும் பாவைநோன்பின் பயன் இறையனுபவம் என்றும் கூறுவர்.

கருணையின் உருவான சிவபெருமானை யடையவெண்ணி மாணிக்கவாசகர் பாடிய திருவெம்பாவை, அப்பெரியாரது அழகிய திருவாசகத்தின் மணிமுடியாகும். திருவாதிரைக்குப் பத்து நாட்கள் முன்பு பெண்கள் பாவைநோன்பு நோற்கத் தொடங்குவர். அதுகண்டு அவர்கள் பாடியதுபோல மாணிக் கவாசகர் பாடியவையே திருவெம்பாவைப்பா சுரங்களாகும்.

> அன்னவரியல்பு கண்டார் ஆங்கவர் புகன்றதாக
> மன்னிய திருவெம்பாவை வாசகம் பேசிப்பின்னர்
> கன்னியர் பாடியாடும் கவின்கோள் அம்மனைகண்டன்ருர்
> பன்னிய பாடலாக அம்மனைப்பாடல் செய்தார்.

திருவெம்பாவை திருப்பெருந்துறையில் பாடப்பெற்றதாகத் திருவாலவாயுடையார் புராணம் கூறும். அது திருவண்ணு மலையில் பாடப்பெற்றதாக திருவாதவூர்ப்புராணம் கூறுகிறது.

பிரமவிஷ்ணுக்கள் இறைவனுடையமுடி-அடி தேடி மயங்கிய காலத்தில் இறைவனுன சிவபெருமான் அக்கினியுருவமாகக் காட்சியளித்தாரன்றே! இக்காட்சியை

ஒருவ! நின் ஆதி காணுது இருவர்
மூவுலகுமூன்று நாற்றிசையுமிதர
ஐம்பெருங்குன்றத்து அழலாய்த்தோன்றினே!

எனத் தனது திருவெழு கூற்றிருக்கையில் நக்கீரர் கூறுவார். இக்காட்சி திருவெம்பாவையில்

"ஆதியும் அந்தமுமில்லா அரும்பெருஞ்சோதி" (1) என்றும்
"பரஞ்சோதி" (2) என்றும், மாலறிய நான்முகனும்
காணுமலேயினையை" (5) என்றும் "கேழில் பரஞ்சோதி" (8)
என்றும், பாதாளம் ஏழினும் கீழ் சொற்கழிவு பாதமலர்
போதார் புனைமுடியும் எல்லாப் பொருள்முடிவே" (10) என்றும்
"சோதித் திறம்பாடி" (14) என்றும்
அண்ணுமலையான் அடிக்கமலம் சென்றிறைஞ் சும் (18)

என்று அடிக்கடி குறிப்பிடுவதால், இது திருவண்ணுமலை யிலேயே பாடப்பெற்றிருக்கலாம். எங்குபாடினுல் என்ன? "ஆதியும் அந்தமுமில்லா அரும் பெரும் சோதியான" இறைவன், நாம் அவனைக்குறித்துப் பாடினுல், "இங்கு நம் இல்லங்கள் தோறும் எழுந்தருளி"க் காப்பான் என்பதை நினைக்கும் கால், என்ன இன்பம்! வாழி நம்மை உய்ய ஆட்கொண்டருளும் பொன்மலர்கள்! வாழி மணிவாசகர் திரு நாமம்!



உ

திருச்செந்திலாண்டவன் துணை

# திருவாசக அநுபூதி உரை*

(சீகாழித் தாண்டவராயர் அவர்கள் இயற்றியது)

திருச்சிற்றம்பலம்

## பிடித்த பத்து

இனி, பிடித்த பத்தாவன.
அகத்தியச் சூத்திரம்.

நடித்த பாதம் பிடித்த பத்து
சித்த மலமறு முத்திக்கலப் புரைத்தல்.

பொழிப்புரை:— முற்பதிகத்தில் அருளிய அநுபூதியில் பேரானந்தப் பெருங்கடல் அமுதமாராதருந்தி அதன் மேற் கொண்டு பெற்ற இன்பவன்பாகி, மற்றொன்றறியா வியாபக வகையால் அதனுளடங்கிச் சிவானந்த சுவாநுபூதி அதுவாய்ப் பெறுதலால், பரத்தைத் தேடும் பண்பிலே என்ற அத்துவிதக் கலப்பநுபூதிகம் அன்பாற் காண்க.

இப்பதிகம், ஆசிரிய விருத்தமாகப் பன்னிரு திருநாமம் பெற்ற திருத்தோணிபுரத்தில் ஓதியது.

534. இனி, திருவடியே பற்றுக்கோடானதென்ற (தி. - ன.) :—

உம்பர்கட் கரசே ஒழிவற நிறைந்த
யோகமே ஊற்றையேன் றனக்கு
வம்பெனப் பழுத்தென் குடிமுழு தாண்டு
வாழ்வற வாழ்வித்த மருந்தே
செம்பொருட் டுணிவே சீருடைக் கழலே
செல்வமே சிவபெரு மானே
எம்பொருட் டுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே.

(இ - ள்). ஆண்டவனே! ஓர் விண்ணப்பம்; மகா தேவனே! தேவரீர் வானவரிறைவன், நீக்கமின்றிச் சருவ வியாபக சச்சிதானந்த சிவயோகன்; என்புலாலுடம்பே உண்மை கொண்ட பாவிக்கு அருள்பழுத்தளிந்த கருணைவான் கனியாக அன்புருவாகி என் குலகோத்திரமான முழுமையும்

( தொடர்ச்சி அடுத்த பக்கம் )

# DEEPAVALI SPECIAL FEEDING AT

## VARANASI - ENDOWED CAPITAL RS. 2000/-

Deepavali is a festivity celebrated throughout the Bharath and a bath is taken before day break on the fourteenth day of the dark fortnight in the tamil month of Arpisi (ஐப்பசி). This festival is intended to commemorate the destruction of an asura called Narakasura by Sri Krishna. The word Deepavali means a row of lamps and during that day Children and adults fire crackers during day break. New clothes are worn after the sacred bath. People greet one another saying "Have you had a bath in the Ganges". People of the Ganges region enjoy the day with special significance. They open fresh accounts every year on the day, after performing puja to Goddess Lakshmi and distribute presents and sweets to those, who visit them.

2. This endowment is made by His Holiness Srilasri Kasivasi Arulnandi Tambiran Swamigal avl,

---

(முன்பக்கத் தொடர்ச்சி)

அடிமை செய்து வாழ்வில்லாத பேரானந்த சுகமருளிய பிறவிப் பிணிக்கோர் மருந்தே! சிறப்பென்னும் செம்பொருளான அறிவே! தெளிவான பொருளே! திருவடியே திருவருட் செல்வமே! எல்லாத் தேவரிலும் சிறந்த பரமசிவனே! அடியேன் பொருட்டுத் தேவரீர் திருவுருவான திருவடியே பரமெனக் கருணை வழக்கால் திருவருளே துணையாகப் பற்றுக் கோடுற்றேனே. என்னுயிரை விட்டு எங்கே எழுந்தருளுவது இனி ?— என வருளியதைக் காண்க.

---

* இவ்வரிய நூலைப் பதிப்பித்த சென்னை—திருவான்மியூர், மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் நூல் நிலையத்தாரின் அனுமதிபெற்று இது வெளியிடப் பெறுகின்றது. இதன் விலை ரு. 1[illegible]/- ஷை நூல் நிலையத்தில் கிடைக்கும், 20% கழிவு உண்டு.

Sri Kasimutt, Tirupanandal, Thanjavur District to feed the Brahmins, Saivites and the poor on the auspicious Deepavali day every year at Varanasi. This endowment shall be called "Deepavali special Feeding at Varanasi".

3. The capital of the endowment is Rs. 2000/- (Rs. Two thousand only) and the amount is invested in Fixed Deposit in the State Bank of India, Kumbakonam for five years fetching interest at 6½% per annum. (F. D. No. 076526 - dated 4—6—1968 for Rs. 2000/-) The administration of this endowment shall vest in us and our suceessors in interest.

4. The annual interest after deducting the incidental expenses shall be utilised every year to feed the Brahmins, Saivites and the poor on the Deepavali day - the fourteenth day of the dark fortnight in the month of Arpisi in our choultry at Kumaraswami Mutt, Kedar Ghat, Varanasi in addition to the other feeding charities conducted by us there.

5. The feeding shall be conducted according to the budget prepared by us and our successors in interest, which will depend upon the interest derived and the prices of commodities.

6. The capital shall always remain in our name and our successors in interest. The amount will be reinvested from time to time in long term deposit or in Government Securities fetching high rate of interest. The endowment shall not be diverted to any other purpose than the one specified above.

Tirupanandal
Dated 5-6-1968 } (Sd.) *Kasivasi Arulnandi Tambiran*

Registeredas No. 25 of 1968 of book 4 Volume 54 pages 273 to 275
6th June, 1968.

திருப்பனந்தாள் – ஸ்ரீ காசி மடம்

# ‘திருமுறை வெளியீடுகள்’

| | | ரூ. பை. |
|---|---|---|
| 1 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு டாக்டர் சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் (புதிய பதிப்பு) | 3 50 |
| 2 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அருளிச்செய்த காசிக்கலம்பகம் மூலமும் அரும்பதக்குறிப்பும் | 0 40 |
| 3 | ,, சிதம்பர மும்மணிக்கோவை ,, ... | 0 20 |
| 4 | ,, மதுரைக்கலம்பகம் ,, ... | 0 40 |
| 5 | ,, மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் ,, .. | 0 60 |
| 6 | திருச்செந்தூர்க் கந்தர்கலிவெண்பா-மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்-மதுரைக்கலம்பகம்-நீதிநெறி விளக்கம்-மதுரை மீனாட்சியம்மை இரட்டைமணிமாலை-மதுரை மீனாட்சியம்மை குறம் ... | 2 75 |
| 7 | திருவாரூர் நான்மணிமாலை-முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் ... | 1 25 |
| 8 | சிதம்பர மும்மணிக்கோவை-சிதம்பரச்செய்யுட் கோவை தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை | 1 00 |
| 9 | பண்டார மும்மணிக்கோவை-காசிக்கலம்பகம் சகலகலாவல்லி மாலை ... | 1 00 |
| 10 | சிதம்பரச் செய்யுட்கோவை ... | 0 75 |
| 11 | நீதிநெறி விளக்கம் – ஆங்கிலமும், ஹிந்தியும் ... | 0 50 |
| 12 | ,, – மூலம் ... | 0 10 |
| 13 | நீதிநெறி விளக்கமும் நன்னெறியும்-மூலம் ... | 0 15 |
| 14 | கந்தர்கலி வெண்பா மூலம் மட்டும் ... | 0 10 |
| 15 | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம் ... | 3 00 |
| 16 | மூவர் தேவாரம் அடங்கன்முறை – தலமுறை .. | 8 75 |
| 17* | திருநாவுக்கரசர் தேவாரம் .. ... | 2 00 |
| 18* | சுந்தரர் தேவாரம் .. ... | 1 30 |
| 19 | ஒனபதாம திருமுறை-திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் மூலம் மட்டும் ... | 0 56 |
| 20* | ,, ,, தெளிவுரை ... | 1 50 |
| 21* | பதினோராந் திருமுறை ... | 1 50 |
| 22* | பெரியபுராணம் (மூலம் மட்டும்) ... | 3 00 |
| 23* | அகத்தியர் தேவாரத்திரட்டு ... | 0 36 |
| 24 | அம்மையார் அற்புதத் திருவந்தாதி ... | 0 25 |
| 25 | திருக்கைலாய ஞானவுலா-உரையுடன் ... | 0 50 |
| 26 | திருக்கயிலைத் திருமுறை ... | 0 37 |
| 27 | திருக்கடவூர்த் திருமுறையும் பிரபந்தங்களும் ... | 0 19 |
| 28 | பழமொழித்திருமுறை ... | 0 25 |
| 29 | அப்பர்விழா வெளியீடு ... | 0 25 |
| 30 | Hymns and Proverbs ... | 0 30 |
| 31 | திருவாரூர்-திருப்பனுவல்கள் ... | 0 10 |
| 32 | திருவாரூர் நான்மணிமாலை ... | 0 50 |

Registered With the Registrar of Newspapers for India
Under No. R. No. 1485/57.

Regd. No M. 5574 குமரகுருபரன்

| | | |
|---|---|---|
| 33 | திருத்தொண்டர் புராணசாரம் ... | 0 40 |
| 34 | திருவிளையாடற்புராணம் உரை நடை ... | 2 25 |
| 35 | கந்தபுராணச் சுருக்கம் (மூலம் மட்டும்) ... | 1 75 |
| 36 | கந்தபுராணம்-முதல் மூன்று காண்டங்கள் (மூலம்மட்டும்) | 2 75 |
| 37 | .. யுத்த தேவ காண்டம் ... | 2 00 |
| 38 | .. தக்ஷகாண்டம் ... | 1 50 |
| 39 | கந்தபுராண உரைநடை ... | 3 00 |
| 40 | கந்தர் அலங்காரம் குறிப்புரையுடன் ... | 0 25 |
| 41 | கந்தரனுபூதி தெளிவுரை ... | 0 35 |
| 42 | இந்து நீதி நூல்கள் ... | 0 10 |
| 43 | நவக்கிரகமாண்பு ... | 0 25 |
| 44 | ஸ்ரீ சயிலம் ... | 0 10 |
| 45 | திருவுசாத்தானக் கல்வெழுத்துக்கள் ... | 0 37 |
| 46 | திருவெம்பாவை-திருப்பள்ளியெழுச்சி ... | 0 10 |
| 47 | திருக்குறள் அறத்துப்பால் மூலமும் குறிப்புரையும் ஹிந்தி மொழி பெயர்ப்பும் ... | 1 50 |
| 48 | திருக்குறள்-பொருட்பால் .. ... | 2 50 |
| 49 | திருக்குறள் - காமத்துப்பால் .. ... | 1 00 |
| | ஷை 47, 48, 49 திருக்குறள் 3புத்தகமும் .. | 4 00 |
| 50 | திருவருட்பயன் மூலம் இந்தி, ஆங்கில மொழிபெயர்ப்புடன் | 1 00 |
| 51 | திருக்குறள்-உரைக்கொத்து-பொருட்பால் 2-ம் பதிப்பு | 2 75 |
| 52 | தாயுமானசுவாமிகள் பாடல் குறிப்புரையுடன் ... | 1 25 |
| 53 | குமரகுருபரர் வரலாறும், அற்புதத்தேவாரத்திரட்டும் ... | 0 30 |
| 54 | திருக்குறள்-பொருட்பால்-பரிமேலழகர் உரை இலக்கணக் குறிப்பின் விளக்கம் ... | 0 13 |
| 55 | செந்திலாண்டவன் மகிமை ... | 0 15 |

மேலே கண்ட நூல்கள் கிடைக்குமிடங்கள்:.

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோயில், ஸ்ரீவைகுண்டம்.
2. ஸ்ரீ K. சுப்பிரமணிய அய்யர் அவர்கள்.

"தியாகராஜ விலாசம்" 53. பிள்ளையார் கோயில்தெரு.
திருவேட்டீஸ்வரன்பேட்டை, திருவல்லிக்கேணி, சென்னை-5

குறிப்பு: * இக்குறியிடப் பெற்றவற்றின் விற்பனைத் தொகை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்ற பன்னிரு திருமுறைப் பதிப்பு நிதியைச்சாரும். மற்ற நூல்களில் என் 51, 52 தவிர்த்து எஞ்சியவற்றின் விற்பனைத்தொகை 'குமரகுருபரன்' பத்திரிகையைச்சாரும்.

அச்சிட்டது:- குமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம்-68.